# பெரியயெழுத்து
# பவளக்கொடிமாலை
# படங்களுடன்

விலை அணா-

1920

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவரவர்களியற்றிய

# பவளக்கொடிமாலை.

இஃது,

குயப்பேட்டை

வீ. இராஜுமுதலியாரவர்களால்

பார்வையிடப்பட்டு,

மதுரை புதுமண்டபம் புத்தகஷாப்

பி. நா. சி. கடைகாரியம்,

மு. கிருஷ்ணப்பிள்ளை அவர்களால்

பிடாரித்தாங்கல்

நாராயணசாமிமுதலியார் குமாரர்

சிதம்பரமுதலியாரவர்களது

சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1920.

இதன்விலை அணா—6.

# மயிர்வளரும் பரிமளத்தைலம்.

இந்தத் தைலத்தில் கொஞ்சம் கையில்விட்டுத் தேய்த்து தலையில் தடவிவர மயிரின் சிவந்தநிறம், சுண்டு மயிர்வெடிப்பு மயக்கம் தலைசுழற்றல் முதலிய பித்தசம்பந்தமான வியாதிகளையும் கண்ணெரிவுமுதலிய நேத்திரவியாதிகளையும் கண்டித்து மயிரைக்கறுமையாயும் செழிப்பாயும் அடர்த்தியாயும் வளரச்செய்வதோடு, சுகந்த வாசனையையும் மயிர்க்கால், கண், மூளை, இவைகளுக்கு குளிர்ச்சியையும்கொடுத்துப் பித்தசாந்தி செய்து இரவில் சுகமான நித்திரையைக் கொடுக்கும். இவை நாளடைவில் உபயோகித்துவந்தால் பித்தத்தால் நரைத்தமயிர்களும் கறுக்கும். இதை ஒருதடவை உபயோகித்தவர்கள் மறுபடியும் இதை கைவிடார்களென்பது திண்ணம் ஸ்திரீகள் புருஷர்கள் யாவரும் உபயோகிக்கலாம் இந்த தைலத்திற்கு வேறுசில எண்ணைகளைப்போல மயிரை உதிர்த்தல் முதலிய கெட்டகுணங்களில்லையென்று உறுதியாய் சொல்லுகிறோம்.

இதன் விலை ரூபா 1.

எமது கேட்லாக் வேண்டுமானால் அரையணா தபால் ஸ்டாம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

இப்படிக்கு,

பி. நா. சிதம்பரமுதலியார்.

பிரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு,

மதராஸ்.

உ

கடவுள் துணை.

# பவளக்கொடிமாலை

## காப்பு-கலிவிருத்தம்.

வேகமானெறி சேரும்வினைகளுந்
தாகபோக விடாததளர்ச்சியுஞ்
சோகவாரியி னுல்வருந்துன்பமும்
போகவானை முகவனைப்போற்றுவாம்.

## விநாயகர்-தோத்திரம்.

அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
சத்திக்கணபதியே சரிந்தவயிற்ரோனே
காரானைமாமுகனே கணபதியேமுன்னடவாய்
ஸ்ரீராமர்தன்மருகா செல்வக்கணபதியே
பேழைவயிற்ரோனே பெருச்சாளிவாகனனே
வேழமுகத்தோனே விநாயகரேநான்சரணம்
கந்தருக்குமுன்பிறந்த கற்பககேமெய்ப்பொருளே
வந்தெனக்குமுன்னடவாய் மாயன்மருமகனே

## கலைமகள் துதி.

வாணிசரஸ்வதியே மறையவனார்தேவியரே
சொற்கள்வழுவாமல் சொற்குற்றம்வாராமல்
நாவுதவருமல் நடத்துமம்மாயிக்கதையை (ல்
ஐந்தெழுத்தையோரெழுத்தாயழுத்துமம்மாவென்னாவி
எட்டெழுத்தையோரெழுத்தாயெழுதுமம்மா நாவுதனில்

## துரோபதை துதி.

தோராவடிவழகி துரோபதையேபாஞ்சாலி
அக்கினியில்வந்துதித்த ஆதிபராசத்தியரே
நெருப்பிற்பிறந்தவளே நீலவர்னன்தங்கையரே
மந்தாரக்குந்தியற்கு முந்திவந்தமருமகளே
சந்தனவடிவழகன் தருமராசன்தேவியரே
பாடத்தொடங்கினேன் பாஞ்சாலன்சீர்மகளே

பவளக்கொடிமாலை பாடத்துணிந்தேன்யான்
கற்றோர்க்குக்குற்றங்கள் காதுவழிநேர்ந்தாலும்
உற்றபிழைகளெல்லாம் உயர்ந்தோர்மனம்பொறுத்து
இப்புவியோரெல்லோரும் ஒப்பிமனமகிழ
அப்பால்நடந்தகதை அடியேனுரைத்திடுவேன்

அல்லி அரசிருக்கை.

---

அல்லிப்பெருமாள் அரசாளும்நாயகியாள்
ஆறுயிரம்பாண்டியர்க்கு அரியதுரைமகளாம்
மதுரைநகராளும் வாழ்பாண்டிநாடுடையாள்
நாலுமலையாளம் நடுவானதென்மதுரை
தென்மதுரையாளுகிற தேன்மொழியாளல்லியம்மாள்
ஆணரசாண்டாளே அழிந்துபோம்சீமையென்று
பெண்ணரசாளவென்று பிறந்தாளே அல்லியிலே
ஒருவர்-வயிற்றிற்பிறந்ததில்லைவன்கொடுமைசெய்ததில்
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை (லை
ஓடுகிறதண்ணீரில் உள்ளேமணற்சேருமுண்டு
அடிக்கிறகாற்றதனில் அலைகாற்றிற்றுரும்புமுண்டு
காலகண்டதாதருக்கு கண்டங்கறுப்புமுண்டு
சந்திரற்குமச்சமுண்டு சற்றேகறுப்புமுண்டு
குண்டுமணிக்காணுலுங் கொஞ்சங்கறுப்புமுண்டு
அவள்-மயிரேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை
புருவங்கறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை
மன்னன்விஜயன் மடலூர்ந்தமாதேவி
காளைவிஜயன் கட்டழகன்மாதேவி
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்த நீன்முகனை
வெட்டிக்கெலித்து வீரபட்டங்கட்டினவள்
பொம்மைவிருதுகட்டி பூமியெல்லாமாளுகிறள்
அல்லியென்றுபேர்சொன்னல் அழுதபிள்ளைவாய்மூடும்
கொம்பனையாள்பேர்சொன்னல் குருவிதண்ணீர்குடியா
கட்டழகிபேர்சொன்னல் கனதெய்வங்கூத்தாடும் (டு
அல்லியென்றுபேர்சொன்னல் அறுந்ததலைகொக்கரிக்
கட்டழகிஅல்லியருங் காலையில்தானெழுந்து (கும்
முத்துச்சிவிகையது ஏறிமுருகுழலாள்
தாதியருந்தோழியருந் தையல்மார்சூழ்ந்துவர

பூங்காவனச்சோலை போயிறங்கியல்லியரும்
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
பொய்கையிற்போயிறங்கி துய்யமுகஞ்சுத்திபண்ணி
முத்துநிகர்த்தபல்லும் முருக்கம்பூச்செவ்வாயும்
காலோடுகைகளுங் கனிவாயுஞ்சுத்திபண்ணி
சிவசிவாவென்றுசொல்லி திருநீற்றுக்காப்பணிந்து
மதுரைமீனாட்சியரை மனதிலேதானினைந்து
சொக்கரடிபணிந்து தோகையரும்பூச்சொருகி
சந்தனமும்பன்னீருஞ் சவ்வாதுந்தானணிந்து
பார்ப்பாரபரதேசி பண்டாரஞ்சங்கமர்க்கும்
அந்தணர்சோகியர்க்கும் அதிதிபரதேசியர்க்கும்
தானம்வழங்கிவரத் தாமரைசூழ்வாழ்மாரி
தருமத்தைசெய்தவளுந் தண்டிகையின்மீதேறி
பூங்காவனத்தைவிட்டுப் பொற்கொடியும்வாராளே
ஆனையின்மேலபேரிகை அடிபடுதுகுமுகுமென்று
ஒட்டையின்மேல்பேரிகை ஓசைகிளம்புகுது
எக்காளமூதிவர இடக்கையும்டோலடிக்க
சங்கீதமேளம் சபையில்முழங்கிவர
ஐங்காதவழிதூரம் அநேகதாரையூதிவர
நாற்காதவழிதூரம் நாகசுரமூதிவர
மூக்காதவழிதூரம் முரசுமுழங்கிவர
தித்திமிதோமென்று சிறுபெண்களாடிவர
தத்திமிதோமென்று தாளங்கள்போட்டுவர
கவிஞர்கவிபாட கட்டியங்களார்ப்பரிக்க
புலவர்புகழ்ந்துவர புஷ்பங்கள்தூவிவர
நட்டுவர்கள்பாடிவர நங்கையர்களாடிவர
செடில்கட்டிமல்லக செட்டிகள்யுத்தஞ்செய்ய
ஆடாதகூத்துகளும் அரிச்சந்த்ரநாடகமும்
கேளிக்கைபார்த்துமல்லோ - கிளிமொழியாள்வாராளே
தெற்குகிழக்குத் தெருவீதிதான்கடந்து
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதிகளும் அரண்மனையுந்தான்கடந்து
மாடத்தெருக்கடந்து மண்டபமருகில்வந்து
பல்லக்கைவிட்டிறங்கிப் பார்மனையினுட்புகுந்து
முத்துமிதியடியைத் தொட்டுமிகநடந்து
மாணிக்கக்கிரீடங்கள் மகுடமுடிதுலங்க

தாதியர்கள்சூழ்ந்து தனிக்கவரிவீசிவர
மாதர்புடைசூழ மண்டபஞ்சென்றேறினாள்
ஓராம்படித்தளமாம் ஓலைப்பூமண்டபமாம்
இரண்டாம்படித்தளமாம் இரத்னகிரிமேடைகளாம்
மூன்றாம்படித்தளமாம் முத்துசெம்பொன்படிவாசல்
நான்காம்படித்தளமாம் நாகரத்னமண்டபமாம்
ஐந்தாம்படித்தளமாம் அரக்குமணிமேடைகளாம்
ஆறாம்படித்தளமாம் அழகானமேடைகளாம்
ஏழாம்படித்தளமாம் எழிலானமண்டபமாம்
எட்டாம்படித்தளமாம் எண்ணெய்க்கால்மண்டபமாம்
ஒன்பதாம்படித்தளமாம் ஓலைப்பூச்சாவடியாம்
பத்தாம்படித்தளமாம் பளிங்குமாமண்டபமாம்
ஆயிரங்கால்மண்டபத்தில் அல்லியரும்வந்தமர்ந்தாள்
செம்பொன்முடி துலங்க செங்கோலில்வந்தமர்ந்தாள்
ஆறாயிரம்பாண்டியர்க ளனைவோரும்வந்தமர்ந்தார்
பன்னிரண்டுமந்திரியும் படைத்தலைவர்வந்தமர்ந்தார்
மந்திரிபிரதானிகளும் மற்றுமுள்ளராசர்களும்
மூன்னூறுகோடி முடிமன்னர்வந்தமர்ந்தார்
ஐந்நூறுகோடி அரசுமன்னர்வந்தமர்ந்தார்
முடியோடுமுடிநெருங்கும் மருகுழலாளம்பலத்தில்
சட்டையொடுசட்டை நெருங்குஞ்சபைதனிலே
அமரதருஞ்சமரதரும் அதிரதரானவரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
நிறைந்தகொலுவாயிருக்கும் நேரிழையாளம்பலத்தில்
அப்பெரியசபைதனிலே அல்லியவள்கொலுவிருக்க
காணவருவாருங் கைகட்டிநிற்பாரும்
பார்க்கவருவாரும் பாண்டிப்பெருமாளை
தூரத்துராசாக்கள் சுருளோலைகொண்டுவருவார்
காதத்துராசாக்கள் கையோலைகொண்டுவருவார்
செம்பொன்னுங்கப்பணமுந் தீவுகிளிப்பிள்ளைவரும்
இந்தவிதமாக யிருக்கின்றவேளையிலே

## புலந்திரன் விளையாடல்!

அந்தச்சமயத்தில் அழகுபுலந்திரனும்
செண்டுமறவானுஞ் சிநேகிதரைத்தான்பிரியான்
கோட்டிமறவானுங் கூட்டாளிபிரியானும்
தாயாரைச்சுற்றிவந்து தயிருக்கழுவானும்
பாதத்தைச்சுற்றிவந்து பாலுக்கழுவானும்
விளையாடிவீட்டில்வந்து வெண்ணைக்கழுவானும்
முகந்தாக்கால்வாயதனை முலைப்பால்கவுச்சடிக்கும்
வீதிவிலாசமது விளையாடும்வேந்தனவன்
தங்கத்தேரோட்டித் தார்வேந்தர்வீதியெல்லாம்
செம்பொன்தேரோட்டித் திகழ்வேந்தர்வீதியெல்லாம்
மாணிக்கத்தேரோட்டி மன்னர்தெருவீதியெல்லாம்
முத்துத்தேரோட்டி முடிமன்னர்வீதியெல்லாம்
வசந்தமணிமண்டபத்தின் வழியேவரும்போது
பஞ்சவர்னக்கிள்ளைகளைக் கண்டந்தப்பாண்டியனும்
இப்படிக்கொத்ததே ரியற்றப்புலந்திரனும்
மாதாகொலுச்சபைக்கு வந்தான்புலந்திரனும்
தண்டையபசையச் ச ங்கைகலகலென
அரவடமுங்கிண்கிணியும் அரையில்திழல்காட்ட
கண்டசரமுங் கனவயிரத்தாழ்வடமும்
மார்பில்பதக்கமின்ன வச்ரகவசங்கள்மின்ன
வட்டமிட்டநெற்றியிலே வயிரமுடிதுலங்க
பட்டிகட்டிவொட்டியாணம் பசும்பொன்னூர்சமூதாடும்
கச்சுபுரண்டாடக் கட்டழகர்வாரானும்
சிறுகால்மிதியடியாம் சிங்காணிவில்லழகாம்
பக்கமிருபுறமும் பரிசம்பிடித்துவர
கட்டழகன்பின்னுகந்த்திசுழற்றிவர
ஈட்டிபிடித்தவர்கள் இருபுறமுஞ்சூழ்ந்துவர
தாயார்கொலுச்சபையில் தார்வேந்தன்வந்துநின்றான்
வந்துநின்றதன்மகனைக் கண்டந்ததாயாரும்
அப்பாமகனேவா அழகானகண்மணியே
பிள்ளைகலிதீர்த்தவனே பெருமாளேவாருமென்றாள்
அண்டத்துச்சந்திரனே அருகிருக்கும்பாற்குடமோ
சொக்கர்திருமாளிகைக்குத் தூண்டாமணிவிளக்கோ
வைகைக்கரைதனக்கு மண்சுமந்தசொக்கருள்

கப்பலுஞ்சேரங்குங் கரைதுறையுமுள்ளவனே
சங்கீன்றமுத்தோ சகதலமாண்டவனே
ஆருயிரம்பாண்டியர்க்கு அழகானபேரமையோ
வாராய்மகனேயென்று வாரிமடியில்வைத்து
ஏந்திமடியில்வைத்தாள் இருகொங்கைபாலொழுக
சட்டையை நீக்கியே சரீரமெல்லாமுத்தமிட்டாள்
உச்சிமுகந்தாளே உள்ளங்கால்முத்தமிட்டாள்
மைந்தரைப்புல்கி மடிமேலேவைத்திருந்தாள்
என்னவேணுமென்மகனே எனக்கரியக்கூறுமென்றாள்

புலந்திரன் தாயாரைப் பவளத்தேர்கேட்டது.

---

எண்ணிப்புலந்திரனும் ஏங்கியுரைக்கலுற்றான்
தாயார்முகம்பார்த்துத் தார்வேந்தனேதுரைப்பான்
உலகமதையாளுகின்ற உன்மைந்தனைதினால்
மதுராபுரியாளுமுந்தன் மைந்தன்யானைதினால்
தான்-ஏறிவிளையாட இயலானதங்கரதம்
தங்கத்தேர்தந்தாரே தார்வேந்தரென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே திகழ்வேந்தரென்பாட்டன்
மாணிக்கத்தேர்தந்தாரே மகாமன்னரென்பாட்டன்
சித்திரவீதிகளும் சிறப்பானதோப்புகளும்
மட்டில்லாவீதியது மதுரைப்பெருந்தெருவும்
வாழ்பாண்டிநாடாளும் மதுரையுஞ்சுற்றிவர
பாண்டிப்பெருமாளே பவளத்தேர்வேண்டுமம்மா
தந்தாலேயல்லாது சாதமுமுண்ணேனம்மா
போசனம்வேண்டேனென்று புலந்திரன்பிணங்கினான்
மைந்தனுடவார்த்தையைக் கேட்டந்த அல்லியரும்
கேளாக்கருமத்தைக் கேட்டாயேகண்மணியே
தங்கத்தேர்வேண்டித் தார்வேந்தேகேளாமல்
முத்துத்தேர்வேண்டி முடிமன்னுகேளாமல்
மாணிக்கத்தேர்வேண்டி மன்னவனேகேளாமல்
என்னுடையராச்சியத்தில் இல்லையேபவளமது
இல்லாதவுடமைதனை யென்மகனேகேட்டாயே
உற்று நினைத்தாளே ஒருகோடிபுத்திகளை
மைந்தன்மொழிகேட்டு மனதுதுயரமதாய்
அப்பெரியசபைதனி லனேகமன்னர்தங்கள்முன்னே

கணவனுக்குவணங்கிஞல் கனமோசமொன்றுமில்லை
இதனூற்பழுதுமில்லை என்ருர்கள்மந்திரிகள்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியருமேதுரைப்பாள்
ஐந்துவருஷமாய் அவரைமறந்திருந்தேன்
மறைந்திருந்த அர்ச்சுனரை வரவழைத்தேனுனலே
மோகத்திஞலே வரவழைத்தேனென்பார்கள்
ஊரிலேயுள்ளவர்கள் உலகாண்டராசாக்கள்
நாட்டிலேயுள்ளவர்கள் நகைப்பார்களிப்போது
கண்டார்சிரிப்பார்கள் கலியுகத்தாரேசுவார்கள்
பாத்தார்நகைப்பார்கள் பார்லோகமேசுவார்கள்
எப்படியானழைப்பேன் இயலான அர்ச்சுனரை
என்றதுகேட்டவுடன் மந்திரிகளேதுசொல்வார்
தந்தையார்பெருமை யுண்டானுல்தார்குழலே
பெற்ருர்பெருமை யுண்டானுல்மாதாவே
வளர்த்தார்பெருமை உண்டானுல்தாயாரே
கொண்டார்பெருமை வேண்டாமோகொம்பனையே
கணவன்பெருமை வேண்டாமோகாரிழையே
ஆளன்பெருமையது வேண்டாமோ ஆரணங்கே
ஆனைகுதிரைகளை அரண்மனையில்கட்டிவைத்து
குதிரைகளைக்கட்டியே கோடித்துவாழ்ந்தாலும்
ஆளனிருந்து ஆளாதரசுமுண்டோ
புருஷனுமில்லாமல் பெருமைகள்செய்வாரோ
காவலர்கள்கோவிலிலே கைப்பெண்டிரென்பார்கள்
மன்னவர்கள்கோவிலிலே வாழாப்பெண்டென்பார்கள்
கொண்டார்பெருமை வேண்டாமோபொற்கொடியே
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
வம்பரவரர்ச்சுனர்க்கு விண்ணப்பஞ்செய்வதில்லை
ஆரடாதூதுவரே அழையுங்கணக்கர்களை
நாட்டுகணக்கெழுதும் நலமானமந்திரிகள்
சீமைக்கணக்குத் தெரிந்தெழுதும்மந்திரிகள்
கோட்டைகணக்குக் குறித்தெழுதும்மந்திரிகள்
ஊர்கணக்கப்பிள்ளைகளை ஓடியழையுமென்ருள்
அவ்வார்த்தைகேட்டுமந்த ஆங்காரதூதுவர்கள்
ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார்தூதுவர்கள்
அவ்வார்த்தைகேட்டவுட னன்பாகக்கணக்கரெல்லாம்
தடுகப்பயந்தார்கள் கணக்குசுமையெடுத்தார்

எக்கிலெழுத்தாணி இடதுகையில்கருவோலை
வண்ணக்குருத்தோலை வரிசையுடன்கைபிடித்து
உச்சிகொண்டைபோட்டார்கள் உதறிநடந்தார்கள்
சிங்காதனத்துக்கு முன்னாகவந்துநின்று
அல்லிப்பெருமாட்டு அடிபணிந்து தெண்டனிட்டார்
வந்தகணக்கருக்கு வட்டமணைபோட்டார்கள்
மண்குடுக்குப்போட்டார்கள் வந்திருங்களப்பாவென்று
தர்மாபுரமாளும் தர்மலிங்கராயருக்கும் (ள்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அத்தையார்குந்தியற்கும்
வண்ணமிட்டஓலையிலே வக்கணையாயெழுதவேணும்
என்னவென்றுஓலையிலே எழுதுகிறானாலே
சோலைமலருடைய சொக்கர்திருவருளால்
ஸ்ரீரங்கநாதர் திருமால்கிருபையினால்
மதுரைமீனாட்சியம்மை மாதாகிருபையினால்
அல்லியின்மேலே ஆரணங்குபெண்பிறந்தேன்
பெண்ணாய்ப்பிறந்து பெருமாள்முடிசூட்டி
அன்னம்போல்மண்ணாண்டேன் ஐம்பத்தாறுகாதவழி
திருமால்திருவுளத்தால் தரணிபதியாண்டிருந்தேன்
இன்னாள்வரைக்கும் ஏதுகுறையில்லாமல்
வையகத்தையாண்டிருந்தேன் மனக்குறைகளில்லாமல்
உங்கள்செல்வக்குழந்தையது தேவேந்திரன்பேரன்
ஐந்துபிராயமையா அழகாய்வளர்த்தபிள்ளை
செண்டடித்துபந்தடித்து தெருவில்விளையாடி
பொன்னின்தேரோட்டியே போதவிளையாடி
வெம்பலாய்க்காய்ந்து விழுந்துபடுக்கையிட்டான்
பல்லைக்கடிக்கிறதும் பதறிவாய்பினத்துறதும்
தலையைபுறட்டுறதும் நயனங்கள்சோர்கிறதும்
பார்த்துபரிகாரி பண்டிதர்பணிக்கர்களும்
தோஷித்துபோச்சுதென்று சொன்னார்களேந்தனுக்கு
கைதப்பிகாணுதென்று கற்பித்தாரென்னோடே
என்னமோஏதோவென் றிருக்குதுஎன்மனதில்
பொய்சொன்னேனென்றுசொல்லி எண்ணாதீர்புண்ணி
ஓலைகண்டநாழிகைக்கு வரவேணுமுத்தமனே (யரே
கண்ணாலேபார்க்குகைக்கு கடுகெனவேவந்திடுங்கள்
என்றதுசொல்லியே எழுதுங்களோலையென்றாள்
சீர்கணக்கப்பிள்ளைகளும் சொல்வசனந்தான்கேட்டு

சேமக்குருந்தோலை சிக்கெனவேதான்வாரி
அல்லியம்மாள்சொற்படிக்கு அவ்வோலைதானெழுதி
ஓலைச்சுருள்மடித்து செந்திரிக்கைதான்போட்டார்
சில்நல்லமுத்திரை திருவகுப்பின்கீழ்போட்டார்
அவ்வோலைதானெடுத்து ஆனந்தவாழ்மாரி
காற்றிலதிகமுள்ள கடுந்தூதரையழைத்து
நாழிகைக்குகாதவழி நடந்தோடுந்தூதுவரே
தருமருக்குக்கொண்டுபோய் கொடுமென்றுள்ளதையலரும்
மலையோடேதலைகொடுக்கு மன்னரெழுந்திருந்து
ஓலைச்சுருள்வாங்கி ஓங்கிநடக்கலுற்றுன்
மதுரைதெருக்கடந்து வைகைக்கரைகடந்து
சில்லென்றுபூத்த செடியும்வனங்கடந்து
புல்லென்றுபூத்த புலியின்வனங்கடந்து
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனங்கடந்து
பாதிரிமுல்லை பருத்தவனங்கடந்து
தருமருடகோவிலுக்குத் தான்வந்துநின்றூர்கள்
ஓலைச்சுருளைவைத்து வுத்தமனைத்தெண்டனிட்டார்
ஆர்பணிதூதா நீ அறியவுரையுமென்றூர்
மதுராபுரித்துரையாள் வாழ்வரசியல்லியம்மாள்
அனுப்பியதூதரென்று அடிவணங்கிதெண்டனிட்டார்
அல்லிபணியென்ன அதிகமனமகிழ்ந்து
ஓலைச்சுருளவிழ்த்தார் உத்தமனூர்தருமலிங்கம்
அதிலிருக்கும்மர்மமெலலாம் அறிந்தாரேதர்மலிங்கம்
நம்மைமதித்தாளோ நாடாளும்ராசாத்தி
ஐயோமகனேயென்று அழுதுபுலம்புகிறூர்
சம்போசிவனேயென்று தரையிற்புரண்டழுதார்
தம்பிதனஞ்சயற்குத் தநயனெனவந்தவனே
மதுரைநகராளுகைக்குமைந்தனென்றுநானிருந்தேன்
தீர்ந்துதேஉன்னுசை சிவலோகம்போராயோ
சிவனுருடபாதம் சேருகைக்குநாளாச்சோ
ஐக்கியமாய்ப்போகவே ஆச்சுதோவுன்சீவன்
பொன்னுமணியே புலந்திரராசாவே
அல்லிமகனே அழகுபுலந்திரனே
கட்டிமகனே கயிலாசம்போராயோ
பொன்னுங்குடமே நீ புஷ்பமேபோராயோ
ஐயகோவென்று அலறிப்புலம்பலுற்றூர்

வெற்றிமதயானை வீமனவன்கேட்டு
தானுமழுதானே தருமருடனாக
நகுலசகாதேவ ராசர்புலம்பலுற்றார்
தோராவடிவழகி துரோபதைபுலம்பலுற்றாள்
மந்தாரக்குந்தியரும் மாதுபுலம்பலுற்றாள்
சங்கோதியாள்கூடத் தானும்புலம்பலுற்றாள்
அந்நகரும்நாடும் அரசுமிகத்தயங்க
தக்கபுகழுடைய தருமரவரேதுசொல்வார்
வில்லாளிபார்த்தன் விசயனெங்கேசென்றானே
அருச்சுனனைக்கண்டுநான் ஐந்தாறுநாளாச்சே
எங்கேயிருப்பிடமோ ஒன்றுமறியோமே
ஆரடாதூதுவரே அழையுங்கள்தோட்டிதன்னை
தமுக்கடிக்குந்தோட்டியை தானழைத்துவாருமென்றார்
என்றசொற்றான்கேட்டு எழுந்தோடிதூதுவர்கள்
பறையறையுஞ்சாம்புவனை பார்த்தழைத்துவந்தார்கள்
தருமரண்டைவந்தவனும் சாஷ்டாங்கத்தெண்டனிட்
என்னையழைத்தது ஏதுகருமமென்றான் (டான்
அப்போதுதருமலிங்கம் ஆணழகரேதுசொல்வார்
பாராளுந்தருமருக்கு பாக்கதுசொக்கிறதென்று
மெத்தவேபல்லிக்கை காணுதுவேந்தருக்கு
விசயர்முகத்திலே விழிக்கவென்றாரிப்போது
களைதாங்கிப்போச்சுது கட்டழகர்தருமருக்கு
விசயர்பெருமானை வைத்திருந்தால்விட்டிடுங்கள்
தருமாபுரமெல்லாந் தமுக்கடித்துவாருமென்றார்
வீதிபதினாயிரமும் வீரமுரசடியுமென்றார்
இவ்வார்த்தைகேட்டவனும்எழுந்தானேசாம்புவனும்
ஆனையேறிமாலைசூட்டி அடித்தான்பறையோசை
தருமாபுரவீதியெல்லாந் தமுக்கடித்துவாரானும்
என்னசொல்லித்தமுக்கடித்தான் இயலானசாம்புவனு
பாராளுந்தருமருக்குப் பாக்கதுசொக்கிறதென்று
களைதாங்கிப்போச்சு கட்டழகர்தருமருக்கு
பேச்சுமூச்சில்லாமற் பிணம்போல்விழுந்துவிட்டார்
அனைவோருமங்கே அழுதுபுலம்புகிறார்
அர்ச்சுனராசாவை ஆர்வைத்திருந்தாலும்
கண்டவர்கள்விட்டிடுங்கள் கடுகியெழுப்பிடுங்கள்
என்றுஅடித்தானே இயலானதமுக்கோசை

செப்பியடித்தானே தேர்விஜயன்தான்கேட்க
தேவதாசிதெருவுகளும் தெருவுபதினாயிரமும்
அத்தெருவுபெண்களெல்லாம் அனைவருமேதுசொல்
காளையருச்சுனரைக் கண்ணாலேகண்டதில்லை (வார்
எங்களுடவீதியிலே எழில்விசயன்வாரதில்லை
மாயாசுபத்திரையாள் மச்சினியாள்வீதியிலே
அங்கேயிருப்பார்காண் அருச்சுனவீரியனார்
அவர்-தனஞ்சயரென்றுசொல்லி சாமத்திற்கண்டதுண்
உத்தமரென்றுசொல்லி ஓமத்திற்கண்டதுண்டு (டு
ஓமப்புகையிலேதான் உடனிருந்தபாவமுண்டு
கலியாணப்பந்தலுக்குள் கைகோர்த்துநின்றதுண்டு
அம்மிமிதித்ததுண்டு அருந்ததிபார்த்ததுண்டு
ஆளனிவரென்று அனைவோருஞ்சொல்வார்கள்
இவ்விடம்வாராரோ எழில்விசயனர்ச்சுனரும்
இடச்சியுடமாளிகையில் இருப்பாரெனக்கேட்டு (ன்
அவன்-அந்தத்தெருக்கடந்து அப்பாலேபோகலுற்று
சுபத்திரையாள்வீதியிலே சொல்லித்தழுக்கடித்தான்
தருமருக்குவந்ததொரு தாழ்வெலாஞ்சொல்லலுற்றான்
அடித்ததழுக்கோசை அர்ச்சுனருங்கேட்டுவிட்டார்
தேர்விசையன்கோமானுந் திடுக்கிட்டுத்தானெழுந்தார்
பஞ்சணையைவிட்டுமவர் பதறியெழுந்திருந்தார்
சுபத்திரையாள்கண்ணை விழித்தவளுமேதுசொல்வாள்
ஆசாரவாசல்செல்ல எழுந்தீர்காணழகா
எவளுடவாசல்செல்ல எழுந்தீர்காணெழில்விசயா
தீயில்பிறந்தவளை சிந்தையில்நினைத்தீரோ
மின்னொளியாள்வாசலுக்கு மேவநினைத்தீரோ
போகவதிசிந்தை நினைத்தீரோபோர்விசயா
நாககன்னிவாசலுக்குப் போகநினைத்தீரோ
மதுரைதுரையல்லியரை மனதில்நினைத்தீரோ
மற்றொருவர்சிந்தை நினைத்தீரோமன்னவனே
ஆர்மேலேயாசைகொண்டு ஆணழகா நீயெழுந்தாய்
எசுறதுகேட்டவுடன் எழில்விசயனேதுசொல்வான்
அல்லகாண்பெண்ணரசே ஆரணங்கே நீகேளாய்
பாராளுந்தருமருக்குப் பாக்கதுசொக்கினதாம்
மெத்தவும்பல்லிக்கை தோணுதாம்வெருக்குந்
அதிகாளிப்பாக விருக்குதாமண்ணனுக்கு

முகத்தில்முழிக்கஎன்னை மொய்குழலேதேடுகிருர்
அதுஎன்னகருமமென்று அறிந்தோடிநான்வாரேன்
துழாய்மவுலிதங்கையவள் சுபத்ரையாளேதுசொல்வா
தருமருடவாசலல்லால் தையல்மார்வீடுசென்ருள் (ள்
மற்றொருத்திவீடு நீ சென்ருலேவாள்விசயா
ஒருகவளமன்னமது உண்ணேனேபாலமிர்தம்
திரும்பிவருமளவுந் திண்ணேணிலேயடக்காய்
என்றதுதான்கேட்டு எழில்விஜயனேதுசொல்வான்
உன்னை தவிரவிட்டு உலகளந்தான் தங்கையரே
பின்னொருவாசலுக்குப் போவேனென்றெண்ணுதே
அண்ணனைத்தான்பார்த்து அரைக்ஷணத்தில்வாரேன
பாலடிசலுண்டு நீ பாங்காயமுதுசெய்து (டி
வாசகங்களுண்டு மகிழ்ந்திருங்காண்மங்கையரே
வாடாதே நீயிருங்காண் மாதரிளங்கொடியே
போகச்சிலவருளும்போய்வாரேன்பெண்ணேயென்ருர்
மாயாசுபத்திரையாள் வாய்திறந்தேதுரைப்பாள்
ஆகிலும்உம்மைநான் அடையாளஞ்செய்திடுவேன்
அடையாளங்குறையாமல் அருச்சுனரேவாருமென்ரு
வைத்தஅடையாளம் மாருமல்வாருமென்ருள் (ள்
சந்தனகுங்குமமும் சவ்வாதுந்தான்குழைத்து
அருச்சுனன்மார்பிலே அள்ளியறைந்தாளே
சந்தனத்தாலே சதுராய்ப்படமெழுதி
குங்குமத்தாலே குறிப்பாய்ப்படமெழுதி
முத்திரைமோதிரத்தால்முன்மார்பிற்குறியும்வைத்தாள்
குறியுங்குறையாமல் கொப்பனவேவாருமென்ருள்
ஆணலழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
மாதருடவாசலுக்கு மயிலணையேபோனுக்கால்
மற்றொருத்திவாசலுக்கு மங்கையரேநான்போனல்
உன்-குறிவந்துகூட்டிடுமோ கொம்பேரிடையாளே
உன்-ஆணைவந்துகூட்டிடுமோ ஆனந்தவாழ்மாரி
இருமிருமென்றுசொல்லி எழில்விசயன்போய்நடந்தா
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம் (ன்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குறிஞ்சிப்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு

சிங்காணிவில்பிடித்து தேர்விசயன்போய்நடந்தான்
பொன்னிழைத்ததுப்பட்டா புவியிற்புரண்டுவர
பூங்காவனம்புகுந்து புஷ்பமலரெடுத்து
தருமரைப்பூசைபண்ணச் சப்பங்கிப்பூபரித்து
வாய்வேகமாகவே வந்துவிட்டானருச்சுனனும்
அங்காடிவீதிகளும் அரசர்தெருவுந்தாண்டி
தருமரிருக்கின்ற சாதிலிங்கமேடையிலே
சாந்தணிந்தமேடையிலே தருமரைத்தான்பார்த்து
தருமருடபாதத்தில் சாஷ்டாங்கதெண்டனிட்டார்
கொண்டுவந்தபூமலரைகுருவென்றுதான்சொரிந்தான்
அண்ணாசரணமென்று அடிபணிந்துதெண்டனிட்டான்
கைகட்டிநின்றானே கட்டழகன்அர்ச்சுனனும்
வந்துபணிந்தவனை வாழ்த்தியெடுத்தணைத்து
வாழ்வாய்வளர்ந்திடுவாய் வையகத்திலென்னாளும்
நிற்பாய்நிலைதரிப்பாய் நிலையரசாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலே கலங்காதரசாள்வாய்
பதினாறுகலையுடைய பார்த்திபா நீகேளாய்
மதுராபுரித்துரையாள் வாழ்வரசியல்லிமகன்
பார்த்திபாஉன்மகன்தான் பாலன்புலந்திரனார்
செண்டடித்துப்பந்தடித்துத் தெருவில்விளையாடி
கோட்டிவிளையாடி வீட்டில்வந்துபாலகனும்
களைத்தாற்போல்விழுந்தானும் காளைபுலந்திரனும்
காய்ச்சலாய்க்காய்கிறதுங் கண்ணைச்சொருகிறதும்
வெம்பலாய்க்காய்கிறதும் மெத்தவாய்பினத்துறதும்
நயனங்கள்பஞ்சடைந்து நாக்கைவறட்டுவதும்
தோஷித்துப்போனதாய்த் தோணுதாமைந்தனுக்கு
பண்டிதர்பணிக்கர்களும் பார்த்தவயித்தியரும்
கைவிட்டுப்போனாராங் கட்டழகாவுன்மகனை
முகத்தில்விழிக்கவென்று முடிபுனைந்தராசாத்தி
ஓலையெழுதியே வரவிட்டாளுத்தமனே
தூரத்துச்செய்தி சுருளோலைவந்திருக்க
போகாதிருந்தாக்கால் பிழைவந்துநேர்ந்துவிடும்
ஆகையினால்தம்பியரே அருச்சுனரேபோய்வாரும்
அச்சுதானந்த ஐயரை நீர்கூட்டிப்போய்
அவள்-ஆங்காரக்கன்னியென அறிவோமவள்குணத்
மண்ணாளும்ராசாத்தி வலைக்காரமுள்ளவள்காண் (தை

அவள்-வார்த்தைக்குவார்த்தை மறுவார்த்தைபேசாதே
பாலன்புலந்திரற்குப் பல்லிக்கைதீரளவும்
உடம்புதெளிந்து உலாவித்திரியளவும்
வாழ்மதுரைராச்சியத்தில் மன்னுதனித்திருந்து
மைந்தன்புலந்திரனை மன்னுவரவழைத்து
குமாரனைக்கூட்டிவந்து குருநாடுசேருமென்றார்
என்வார்த்தைதள்ளாமல் இப்போநடவுமென்றார்
போய்வாருமென்றுசொல்லிப் புத்திமிகவுரைத்தார்
அப்போதருச்சுனனும் அப்படியேநல்லதென்றான்
குந்தியம்மாள்தன்பாதம் கொப்பனவேதெண்டனிட்டா
தாயாருடபாதஞ் சாஷ்டாங்கதெண்டனிட்டான் (ன்
மதுரைக்குப்போய்வாரேன் மாதாசெலவருளும்
போய்வாருமருச்சுனரே யென்றாளேபொற்கொடியாள்
வெற்றிமதயானை வீமாசெலவருளும்
அத்தண்டபேரும் அனைவோருஞ்செலவருள
முகத்திலேசீலையிட்டு முடிமன்னன்தானெழுந்தான்
ஏதுக்கழுகிறீர் ஈஸ்வரன்துணையிருப்பான்
மைந்தன்புலந்திரற்கு வாட்டமொருக்காலுமில்லை
மாயன்துணையிருப்பார் மன்னவரேபோய்வாரும்
சொக்கர்துணையிருப்பார் சுந்தரரேபோய்வாரும்
என்றதுகேட்டு எழுந்தாரருச்சுனனும்
அச்சுதானந்த ரையருந்தானுமதாய்
தோழனுந்தானுமாய்த் துரிதமாய்த்தானடந்தார்
கோட்டைகடந்து கொத்தளமுந்தான்கடந்து
தருமாபுரங்கடந்து தானடந்தானருச்சுனனும்
காடுகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுகடந்து அரியசுனைகடந்து
சில்லென்றகாடுஞ் செடியும்வனங்கடந்து
வைகைக்கரையேறி மதுராபுரித்தேடி
தோழனுந்தானுமாய்த் துரிதமுடன்தானடந்தார்
மதுரையிலுள்ளவரைக் கண்டானேவாள்விசயன்
அச்சுதானந்த ரையர்முகம்நோக்கி
மைந்தன்புலந்திரற்கு வாட்டங்களுண்டானால்
கம்மாதோநாடு கலங்காதோராச்சியங்கள்
என்னைக்கண்டபோதே யெல்லாம்புலம்பாதோ
மைந்தன்புலந்திரற்கு வாட்டங்கள்ளொன்றுமில்லை

எத்தைநினைத்தாளோ இராசாத்தியல்லியரும்
முன்னதுபூசல் முதலைநினைத்தாளோ
ஆங்காரக்கன்னியென்று அறிவோமவள்குணத்தை
அச்சுதானந்த ரையருங்கூறிடுவார்
அவள்-வார்த்தைக்குவார்த்தை மறுவார்த்தைபேசாதே
சொல்லுக்குச்சொல்லு வில்லங்கம்பேசாதே
நீர்முன்னே நடவுமென்று முகப்பணியிலுட்கார்ந்தார்
வாள்விசயனர்ச்சுனனும் வந்தானரண்மனைக்கு
அங்கிருக்குந்தூதுவர்கள் அருச்சுனரைக்கைதொழுதா
உங்கள்துரையெங்கேயென்றார் உலகாளும்ராசாத்தி(ர்
ஆயிரங்கால்மண்டபத்தில் அங்கேயிருக்கின்றார்கள்
என்றதுகேட்டு எழில்விசயன்போய்நடந்தான்
மாணிக்கமண்டபத்தில் வாள்விசயன்போய்நடந்தான்
கொம்பனைக்குமுன்னேவந்து கும்பிட்டான்வாள்விசய
ன்,கையெடுத்துக்கும்பிட்டான் காளையந்தஅர்ச்சுனனு
ம்,வணங்கினஅருச்சுனனை வாவென்றுதானழையாள்
என்னென்றுகேளாளாம் ஏறமுகம்பாராளாம்
நின்றாரேயருச்சுனரும் நெடுங்கால்கடுத்துவிழ
இருகால்கடுத்துவிழ ஈரிரண்டுநாழிநின்றார்
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
ஒரு-ஆளடிமையென்றாலும் அரசுதுரைநாயகமே
வந்தவராரென்று வாய்திறந்துபேசாரோ
எங்குவந்தீரென்னாரோ இராசகுலப்பெண்பெருமாள்
என்றதுதான்கேட்டு இளங்கொடியாளல்லியரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
மன்னவரருச்சுனர்மேல் மர்மந்தொடுத்தோமென்றால்
மைந்தனுக்குப்பவளத்தேர் வாராதுயென்றுசொல்லி
அண்ணாந்துபார்த்தாளே அர்ச்சுனராசாவை
கண்டாளருச்சுனரை கனதியுள்ளமன்னவரை
முகத்தில்விழிக்கவென்று விதித்ததோயெந்தனுக்கு
உன்னைக்-கண்ணாலேகாண விதித்ததோயெந்தனுக்கு
தம்பிபுலந்திரனுந் தங்கத்தேர்கேளாமல்
மாணிக்கத்தேர்வேண்டி கேளாமல்மன்னவரே
பாண்டிவளநாட்டானும் பவளத்தேர்கேட்டதினால்
உன்னைக்-கண்ணிலேகாணக்கிடைத்ததோயெந்தனுக்கு
கண்ணான மைந்தனுக்குத் திருஷ்டிகழித்துவிட்டேன்

என்றதுகேட்டானே எழில்விசயனருச்சுனனும்
வில்லாளிபார்த்தனவன் விசயனவனேதுசொல்வான்
பாண்டிவளநாட்டார்க்குபவளத்தேர்வேணுமென்றால்
ஒரு-ஆளோடேசொல்லி அனுப்பிவைத்திராலே
பவளத்தேர்சொப்பனிட்டு அனுப்புவேன்பத்தினியே
மைந்தன்புலந்திரற்கு வாட்டங்கள்வந்ததென்று
தோஷித்துப்போச்சுதென்று சொல்லியனுப்பலாமோ
தருமருந்தான்கேட்டு தயங்கியழுதாரே
வீமரதைக்கேட்டு மெத்தவழுதாரே
ஈரல்புகுந்ததொரு இரட்டையர்கள் தானழுதார்
மந்தாரக்குந்தியரும் மாதுபுலம்பிவிட்டாள்
தீயிற்பிறந்தவளுந் திகைத்துபுலம்பிவிட்டாள்
அந்நகரும்நாடும் அரசுநதளும்பினது
தருமாபுரத்திலுள்ளார் தவித்துபுலம்பலுற்றார்
இப்படிக்குஓலை யெழுதுவதுஞாயமாமோ
பூமியரசாண்டவர்கள் பொய்யோலையெழுதலாமோ
அவ்வார்த்தைகேட்டுமவள் அல்லியருமேதுரைப்பாள்
பாராளும்வேந்தனவன் பவளத்தேர்வேணுமென்று
உண்ணேன்குளியேன் உரங்கேனேபஞ்சணையில்
சாவேன்மடிவேனென்றான் சமர்த்துள்ளபுத்திரனும்
பாலமுதமுண்ணேனென்றான் பள்ளிக்குபோகேனென்
உண்மைதனைச்சொல்லி ஓலையெழுதினுக்கால் (றான்
மாலைமுடியானே வருவதொருக்காலுமில்லை
சித்தாயன்றங்கையவள் சிறுக்கிசுபத்திரையாள்
சோரவளநங்கை சுபத்திரைநாயகியாள்
அல்லும்பகலும் அறுபதுநாழிகையும்
அவள்மயக்கமெத்தவல்லோ ஆணழகாவுந்தனுக்கு
தேவடியாள்வீதியெல்லாந் திட்டுண்டுதிரிகிறவர்
வருவீரோவாரீரோ யென்றெண்ணிமன்னவனே
இந்த-கூத்திமேலாசையுண்டோ குழந்தைமேலாசையு
உந்தன்மனமறியயெழுதினேனோலையென்றாள்(ண்டோ
மெய்யென்றுசொல்லியே வந்தீரோவாள்விசயா
பவளத்தேர்கொண்டுவந்து தருவீரோபார்த்திபா (ள்
ஆமென்றால்சொல்லு மல்லவென்றுற்றள்ளுமென்று
மதுராபுரியாளே மகுடத்துரைச்சியரே
தீவாந்தரத்திற்போய் தேடியேகொண்டுவாரேன்

எங்கேயிருந்தாலும் இக்ஷணமேகொண்டுவாரேன்
பாங்கானபுத்திரற்கு பவளத்தேர்கொண்டுவாரேன்
எத்தனை நாளையிலே எனக்குத்தேர்தந்தருள்வீர்
பொய்வசனஞ்சொல்லாமல் போர்விசயா நீருரையும்
மூன்றுறு நாளைக்குள் முடித்துநான் வாரேனென்றான்
ஒன்பது நாளையிலே உனக்குத்தேர்கொண்டுவாரேன்
பவளம்வெட்டப்போமிடத்தில்பார்த்திபா அர்ச்சுனரே
தேர்வேண்டிப்போமிடத்தில் தேர்விசயஅர்ச்சுனரே
கானகத்திற்கன்னியரைக் கண்டுமயங்காதே
பல்லைத்திறந்திடுவாய் பரியாசஞ்செய்திடுவாய்
மருமங்களாகவே யிருப்பீரோமன்னவரே
அப்படியாகவே யிருநததேயுண்டானால்
எமலோகம்போனாலும் இட்டுவந்துசங்கரிப்பேன்
பாதாளம்போனாலும் பார்த்துவந்துசங்கரிப்பேன்
வாள்விசயனருச்சுனனு மறுவார்த்தையேதுரைப்பார்
ஐந்துபிராயம் அழகுள்ளபுலந்திரனார்
மைந்தன்மேலாணையது மச்சுரதங்கொண்டுவாரேன்
மைந்தன்மேலாணையிட மனதுதுணிந்துதோதான்
பிள்ளையின்மேலாணையிடப் போதமனய்வந்துதோ
ஏதாய்துணிந்தது என்மகன்மேலாணையிட
இருவருமாகவே யிருந்தங்கேபேசுகையில்
அச்சுதானந்த ரையரும்வந்துவிட்டார்
குருக்கள்மகனாரைக் கொப்பெனவேதான்பார்த்து
வாருமென்றுதானழைத்தாள் மகுடமுடியல்லியவள்
வைகைவளநாடறிந்து வந்தீரோமன்னவனே
வாழ்மதுரைநாடு வழியுந்தெரிந்ததோ
மதுரைக்கொருபயணம் வாராதிருந்ததென்ன
என்னைச்சிறைவைத்தானே எழில்விசயகோமானும்
என்னைமறந்து இருந்தானெழில்விஜயன்
அவர்தான்வருகாமற் போனாலுமச்சுதரே
நீர்தானொருபயணம் நீங்கள்வரலாகாதோ
வாள்விசயனில்லாதே வரவுஞ்செலவுமில்லை
நல்விசயனில்லாமல் நான்தான்வருவேனோ
ஆனாற்கேளையாவே அச்சுதானந்தரே
பாலன்புலந்திரனும் பவளத்தேர்கேட்டினால்
ஆகையினாலே அழைப்பித்தேனருச்சுனரை

மாலையிட்ட நாள்முதலாய் வணங்காதகன்னிகைநான்
மைந்தனுக்காகவே வணங்கினேனருச்சுனரை
பாண்டிவள நாட்டுக்குப் பவளத்தேர்சொப்பனிட்டு
மூன்றுநாளைக்குள் முடித்துநான்வாரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு மன்னவனும்வாரார்காண்
அண்ணாவே நீரும் அறிந்திடுமிதனையென்றாள்
அம்மா-எந்தெந்தஆணை மறந்தாலும்வாள்விசயன்
மைந்தன்மேலாணை மறப்பாரோவாள்விசயன்
எப்படியுங்கொண்டு வருவாரெழில்விசயன்
இப்படியாகவே யிருக்கின்றவேளையிலே

பாண்டியர்கள் அருச்சுனரைக் காணவருதல்.

---

அர்ச்சுனர்வந்தசேதி யறிந்தந்தப்பாண்டியர்கள்
மருமகனைக்காணுகைக்கு வாரார்கள்பாண்டியர்கள்
மகமேருபருவதம்போல் மகிட்சியுடன்வந்தார்கள்
பொன்னுமலை நாடாளும் போர்வழுதியார்கூட (ர்
அல்லியம்மாள்தன்னருகே அனைவோரும்வந்தமர்ந்தா
மகுடத்துரையாளும் வணங்கினாளப்போது
வாருமிருங்களென்று மரியாதைபண்ணினாள்
அருச்சுனரைத்தான்பார்த்து ஆறாயிரம்பாண்டியரும்
மதுரைக்குவரவவக்கு வழியுந்தெரிந்துதோ
வைகைவள நாடு வழியுந்தெரிந்துதோ
மதுரைக்கொருபயணம் வாராதிருந்ததென்ன
வாராமல் நீரிருக்க வைராக்கியங்களுண்டோ
அத்திமரம்பூக்கதுபோல் அதிசயமாய்க்தோணுகுது
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
பாண்டிவள நாட்டாணம் பவளத்தேர்கேட்டதனால்
ஆகையினாலே அமைத்தேனிவரையிங்கு
சீக்கிரமாய்த்தீவுக்குப் போங்காணுந்தேர்விசயா
ஆறாயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
வந்தகாலாறவில்லை மாதுகுலப்பெண்பெருமாள்
இன்றொருநாள்போக்கி யினியொருநாளாகாதோ
பசியோடிருக்கிறார் பாலமுதஞ்செய்யுமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
பாண்டிவள நாட்டார்க்குப் பவளத்தேர்வந்தபின்பு

விருந்துசமைக்கிறதும் வெகுமானம்பண்ணுவதும்
சீக்கிரமாய்நீவுக்குச் சென்று நடவுமென்றாள்
காண்டாவனமெரித்த காளையவர் தான்கேட்டு
மைந்தன்புலந்திரற்கு வாட்டமுண்டாச்சுதென்று
மாதினுடவுத்தாரம் வந்தவுடனே நான்
சிவபூசைபண்ணவில்லை சலபானஞ்செய்யவில்லை
நான்-காலால்நடவாமல் காற்றாய்ப்பறந்துவந்தேன்
இன்றுபகலைக்கு இருந்து நாள்போறேனென்றான்

அருச்சுனனுக்கு விருந்திடல்.

---

பிறவாமுடி தரித்த பெண்பெருமாள் தான்கேட்டு
தனக்குத்தொழில்கள்செய்யுந் தாதிமுகம்நோக்கி
அடிசில்சமையுமென்றாள் ஆனந்தவாழ்மாரி
அப்போது தாதியர்கள் ஆரணங்குதானெழுந்து
பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
நல்லபொறிக்கரியும் ராஜாக்கள்போஜனமும்
பொரித்தபொறிக்கறியும் பொன்போல்பருப்புகளும்
பச்சென்றகீரையும் பவளம்போல்நற்கறியும்
போதச்சமைத்தார்கள் பொற்கொடிமாதரெல்லாம்
அடிசில்சமைத்தோமென் றல்லியர்க்குத்தெண்டனிட்டு
அரண்மனையைத்தான்பெருக்கி அனைவர்க்குமணைபோட, அமுதுண்ணுஞ்சாலையிலே அல்லியரும்அருச்சுனரும், மாயன்பெருமாளும் வந்தஅரசர்களும்
போசனங்களுண்டு புண்ணியருங்கையலம்பி
சிங்காதனத்திலே சேரவேவந்திருந்தார்
அப்போது அல்லியரும் அந்தப்புரம்தானெழுந்து
காச்சாக்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிப்பாக்குடனும் மோரங்கிவெற்றிலையும்
வாகாயிலைச்சுருளும் வர்னத்துவர்பாக்கும்
கோவையிலைச்சுருளும் கொத்துத்துவர்பாக்கும்
அள்ளிக்கொடுத்தாளே ஆணலழகனுக்கு
அந்தச்சமையத்திலே அர்ச்சுனராசாவும்
வம்புபரியாசஞ் செய்தானேவாள்விசயன்
அப்போது அல்லியம்மா ளாரணங்கேதுசொல்வாள்
ஐந்துவருஷமாக ஆர்த்திருந்தகர்மமதை

இன்றெழுந்த நாழிகையில் நினைத்திருக்கக் கர்மமுண்
டோ, என்றலேயாகாது என்றளே அல்லியம்மாள்
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
பன்னிருகாதவழி பவளவனம்போறேனுன்
மனஸ்தாபம்பண்ணுதே மாலைமுடியாளே
மனஸ்தாபமென்னலுமே மாதுதலைகுனிந்தாள்
தலைகுனிந்தசாடைதனைக் கண்டந்ததாதியர்கள்
தென்புறம்பள்ளியறை தேன்மொழிக்குத்தான் திறந்து
வடபுறம்பள்ளியறை மயிலனைக்குத்தான் திறந்து
கட்டிலின்மெத்தைகளைக் கனக்கவிரித்துதறி
காம்பரிந்தமல்லிகைப்பூ கட்டிலின்மேல்பரப்பி
பன்னீரும்கச்சாயம் பைங்கிளிக்குவைத்தாரே
கண்டந்த அல்லியரும் கடுகநடந்தாளே
மஞ்சத்தின்மேலாக மாதுகுதித்தேற
அருச்சுனன்பின்தொடர்ந்து அல்லிபக்கந்தானிருந்து
தக்கோலந்தின்று தனித்துவிளையாடி
வெற்றிலைதின்று விரும்பிவிளையாடி
கச்சாயந்தின்று கலந்துவிளையாடி
காமக்கடலிலவர் கலந்துதெளிந்தார்கள்
மோகக்கடலிலவர் முழுகித்தெளிந்தார்கள்
தீராதஆசையெல்லாம் தீர்த்தானேதேர்விஜயன்
ஆராதஆசையெல்லாம் ஆறினனருச்சுனனும்
மஞ்சத்தைவிட்டிரங்கி வந்தாரிருவருமாய்
மஞ்சனீர்சாலையிலே வந்துபுகுந்தார்கள்
காலோடுகையும் கனிவாயும்சுத்திசெய்து
மார்போடுதோளும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
அலங்காரமண்டபத்தில் அமர்ந்தாரிருவருமாய்
தாமமுடியார்கள் சதுரங்கமாடலுற்றார்
அந்தச்சமையத்தில் அழகுபுலந்திரனும்

## புலந்திரன் தகப்பனிடத்தில் வருதல்.

---

வீதிவிலாசமது விளையாடிவேல்வேந்தன்
பந்தடித்துச்செண்டடித்துப் பாலன்விளையாடி
தாயாரருகாகத் தார்வேந்தனோடிவந்தான்
மகனுரைக்காணவே வாரியெடுத்தணைத்து

உச்சிமுகந்தாளே உள்ளங்கால்முத்தமிட்டாள்
உங்கள்-ஐயர்மடிமேலே செல்லுமென்றுளாரணங்கு
அப்போபுலந்திரனும் அருச்சுனற்குமுன்னேவந்தான்
வாரியெடுத்தாரே மகனார்புலந்திரனை
அப்பாவருகவென் னழகுள்ளபுத்திரனே
பொன்னுங்குடமே புலந்திரனேவாருமென்றான்
தார்விஜயனர்ச்சுனரும் தன்மடியில்வைத்திருந்தார்
அப்போபுலந்திரனும் அருச்சுனருக்கேதுசொல்வான்
ஐயாவே நீர்கேளும் ஆண்மையுள்ள அருச்சுனரே
தங்கத்தேர்தந்தார்கள் தார்வேந்தரென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே சீருடையயென்மாமன்
மாணிக்கத்தேர்தந்தாரே மண்டலத்துராசாக்கள்
முத்துத்தேர்தந்தாரே முடிமன்னராசாக்கள்
சித்திரவீதிகளுந் தெருவுபதினாயிரமும்
மட்டில்லாவீதி மதுரைக்குளோட்டிவைக்க
பாண்டிப்பெருமாளைப் பவளத்தேர்நான்கேட்டேன்
தன்னுலேயாகாதென்று உன்னைவரவழைத்தாள் (ன்
பார்த்திபாயெந்தனுக்குப் பவளத்தேர்வேணுமென்று
அப்படியேநான்தருவேன் அஞ்சாதேயென்மகனே
தீவுக்குப்போறேநான் தீவிரமாய்க்கொண்டுவாரேன்
எங்கேயிருந்தாலும் இக்ஷணமேகொண்டுவாரேன்
எத்தனைநாளையிலே எனக்குத்தேர்கொண்டுவாரீர்
மைந்தரவர்கேட்க மனதுதெளியாமல்
மூன்றுபொழுதிலேநான் முடித்துமேவாரேனென்று
ர், ஒன்பதுநாளையிலே உனக்குத்தேர்கொண்டுவாரேன்
இருமிருமென்றுசொல்லி எழுந்திருந்தார்மன்னவனார்
அச்சுதானந்த ரையனுந்தானுமாய்
இருவருமப்போது எழுந்துநடந்தாரே
கூடநடந்தாளே கொம்பனையாளன்னம்போல்
ஆனைசேனைபரிவாரம் அனுப்பவோராஜாவே
சேனைபரிவாரந் திரளணியுங்கூட்டுவனோ
இருவரும்போநீரோ எந்தனுக்குச்சொல்லுமென
ஆனையுஞ்சேனையும் அனுப்பவும்வேண்டாங்காண்
இருவரும்போய்வாரோம் என்றுவழிநடந்தார்
மன்னரிருவருமாய் மந்திரவாள்கைப்பிடித்து
வைகைக்கரைகடந்து மதுராபுரிகடந்து

எல்லைகடந்து இளந்தோப்புத்தான்கடந்து
காடுகடந்து கரியமலைதான்கடந்து
வேங்கைபடர்ந்த வெண்களாப்பூத்தவனம்
எட்டடிவேங்கை யிருக்கும்வனங்கடந்து
பத்தடிவேங்கை பருத்தவனங்கடந்து
அண்டரறியாத தண்டவனங்கடந்து
வேந்தரறியாத வெளிக்காடுதான்கடந்து
சிங்கமுறங்குவனம் சிறுபுலிகள் தூங்குவனம்
ஆளியுறங்குவனம் அன்னபட்சிதூங்குவனம்
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தவனங்கடந்தார்
கருநாரைக்கிரைதேடுங் கதலிவனங்கடந்தார்
பவளம்விளைகின்ற பாங்கானகாடுகண்டார்
காடுதீப்பட்டாற்போல் காணுவதைக்கண்டார்கள்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
நான்-போகாதகாடுமில்லை ஆடாததீர்த்தமில்லை
பார்த்தாரிருவருமாய் பவளக்காடுள் நுழைந்தார்
கயிறேடுகொம்பு கலந்தகொழுந்துகளும்
ஓடிப்படர்கிறதும் உயர்கொம்பாய்நிற்கிறதும்
தாவிப்படர்கிறதுஞ் சன்னல்பின்னலாகிறதும்
வேரிற்பவளமது மின்னுகிறகாந்திகளும்
பார்க்கமுடிகூடாது பவளம்விளைகிறது
பவளப்புதுமைகளைப் பார்த்துத்திகைத்துநின்றார்
அக்காட்டில்தானிருக்கும் ஆங்காரக்கதண்டுகளும்
ஆனைத்தலையை அறியுங்கதண்டுகள்தான்
குதிரைத்தலைபோ லிருக்குங்கருங்குளவி
சிங்கத்தலைபோ லிருக்குமாஞ்செங்குளவி
வேகமாய்முழமளவாய் வெளிப்பட்டுவந்தது
வாள்விஜயனைக்கொல்ல வந்தகதண்டுகளும்
மன்னனருச்சுனரின் மட்சரேகையைப்பார்த்து
தேவாதிபிண்டமிவன் தேர்விஜயனர்ச்சுனர்காண்
பேரால்புகழ்பெற்ற பெருமாளிவர்காணும்
இவரைக்-கொன்றோமேயாமாலுல்குடிகேடுவந்துவிடும்
நமது-கூட்டமழிந்துவிடும் குலக்கேடுவந்துவிடும்
என்றுபயந்து எழும்பிக்கதண்டுகளும்
அஞ்சிப்பயந்து அடவியிற்சென்றதுகாண்
ஆணலழகனவன் அர்ச்சுனனுமேதுசொல்வான்

அச்சுதானந்த ஐயரேயென்தோழா
நாம்தேவாதிபிண்டமென்று தெரிந்ததுகதண்டுகட்கு
நம்மைக்கண்டபோதே நடுநடுங்கிச்சென்றதுகாண்
என்றவர்கள்சொல்லி இருக்குமந்தவேளையிலே
கானகவேடுவர்கள் கனவேட்டையாடியவர்
அக்காட்டுவேடுவர்கள் அவ்வழியேவாரார்கள்
அர்ச்சுனரைமாயவரை அறிந்தந்தவேடுவர்கள்
மெத்தப்பயந்தார்கள் விடவிடென்றுவேடுவாகள்
கண்டுபயந்தவர்கள் கடுகிவந்துதெண்டனிட்டார்
வேடுவரோ நீங்களென்று விசயனூர்கேட்கலுற்றூர்
ஆமையா நாங்கள் ஆரணியவேடரென்றூர்
இக்காட்டுக்குள்ளே யிருக்குங்கதண்டுகளும்
உங்களைக்கொல்லாதோ உத்தமரேசொல்லுமென்றூர்
கதண்டுகள்கொட்டாதோ காவலரேயுங்களையும்
தென்னூட்டுப்பேர்களைத் தீண்டாதுகதண்டுகளும்
முகமறியாப்பேர்களை முறித்துக்கிடத்திவிடும் (ம்
பவளம்வெட்டவந்தவரைப் பரமலோகஞ்சேர்த்துவிடு
கதண்டுகொட்டிசெத்தவர்கள் கணக்குமிதங்களில்லை
எங்கள்துரைபவளக்கொடி யெழுப்பினதனந்தமுண்டு
செத்துமடிந்தவரைச் சீவனோடெழுப்பிடுவாள்
என்றுமவர்சொல்ல ஏதுசொல்வாரருச்சுனரும்
எங்கள்துரையென்றீரே உங்கள்துரைபேருமென்ன
ஆருடையராச்சியங்கள் அறியவுரையுமென்றூர்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிராச்சியங்கள்
பெண்ணரசுதானோடாபுண்ணியனேசொல்லுமென்றூர்
அந்தவரலாற்றை அன்பாகச்சொல்லுமென்றூர்
ஆனூற்கேளையாவே அடியேனுரைத்திடுவேன்
சேராம்பூராசாக்கள் செகமெய்த்தோரைம்பதுபேர்
ஐம்பதுராசருக்கு ஆணுமில்லைபெண்ணுமில்லை
பவளக்கொடிராச்சியத்தை ஆளுகைக்குப்பாலனில்லை
கண்டகண்டகோவிலெல்லாம் கையெடுத்துக்கும்பிடுவா
ர், காணுதகோவிலுக்கு காணிக்கையனுப்பிவைத்தார்
இலையிலேசாதமுண்டால் என்னதவமென்றுசொல்லி
தரையையவர்மெழுகிச் சாதங்களுண்டார்கள் (ர்
பாலடைக்குப்பால்கொடுப்பார் பசித்தார்முகம்பார்ப்பா
தவித்துவந்தபேர்களுக்குத் தண்ணீர்கொடுப்பார்கள்

சாலைகள்போட்டுவைத்தார் சத்திரங்கட்டிவைத்தார்
நல்லதண்ணீர்க்கிணறுகளும் தடபாவிகட்டிவைத்தார்
அந்தணர்பிராமணர்க்கு அக்ராரங்கட்டிவைப்பார்
தேசபரதேசிகட்குத் திருமகுடங்கட்டிவைத்தார் (ர்
குளங்களைவெட்டிவைத்தார் கோபுரமுங்கட்டிவைத்தா
என்னதவம்பண்ணுலும் எதினுலும்பிள்ளையில்லை
பெருமையாய்ப்பத்தாண்டு பேய்ந்தபெருமழைக்கு
தெப்பலாய்நின்று மிதந்துதவம்பண்ணுர்கள்
மைந்தனைவேண்டியல்லோ மாளிமறந்தார்கள்
புத்திரனைவேண்டியல்லோ பூமிமறந்தார்கள்
அவர்மேல்-ஆலம்விழுதோடி அறுகுமுளைந்திடவும்
அரகராவென்றுசொல்லி அகோரதவம்பண்ணுர்கள்
அரகராவென்றசத்தம் அலைகடலொப்பனைபோல்
சிவசிவாவென்றசத்தம் தெய்வலோகந்தான்கேட்கும்
அவர்பண்ணுந்தவப்பயனை அறிந்துமல்லோயீஸ்பர
யீஸ்பரனும்பார்வதியும் இடபத்திலேறிவந்து (னும்
சோமம்புராசரிடம் சிவன்வந்துயேதுசொல்வார்
நீங்கள்-கூலிகுறைத்தவர்கள் குறைமரக்கால்போட்டவ
அங்காடிகூடையை அதிரவிலையிட்டவர்கள் (ர்கள்
பட்டரைநெல்லுதனிற் பதரைக்கலந்தவர்கள்
குலமடைத்துமேகுருவிக் கூண்டைக்கலைத்தவர்கள்
நந்தவனமழித்தவர்கள் நற்பெண்டைக்கெடுத்தவர்கள்
பாலடைக்குப்பால்வாரார் பசித்தார்முகம்பாரார்
நீங்கள்-எதுதவம்பண்ணுலும் எதினுலும்பிள்ளையில்லை
இந்தப்பிறப்பிலேயும் ஏழுபிறப்புபிள்ளையில்லை
என்றதுகேட்டு இராசாக்களேதுசொல்வார்
என்னபாவம்பண்ணுலும் ஏதுதோஷஞ்செய்தாலும்
பாவத்தைதீர்த்துவிட்டுப் பாலகனைத்தாருமையா
என்றவர்துதிக்கையிலே யீசர்மனமிரங்கி
பவளத்தின்கொடிமேலே பாலகியையுண்டாக்கி
குவ்வாகுவ்வாவென்று குழந்தையழுகுதடா
ஆணுமது பெண்ணுமது அழகாய்வளர்த்திடுங்கள்
செம்மையாயிருங்களென்று செப்பிநடந்தார்கள்
பெண்ணையெடுத்துவந்து பிரியமாய்வளர்த்தார்கள்
கவிழ்ந்தாள்தவழ்ந்தாளே கன்னியிளமயிலும்
ஒருவயதுமிருவயது ஒன்றிரண்டுமூன்றுச்சு



வேடன் பவளக்கொடியாளுகைச் சொல்வது.

ஐந்தாம்பிராயத்திலே அறிந்தாள்பலகலைகள்
பவளக்கொடியாளென்று பார்லோகமாளுகிறாள்
பட்டந்தரித்தலவோ பவனிமுழுதாளுகிறாள்
ஆணரசாண்டாலே அழிந்துபோஞ்சீமையென்று
பெண்ணரசாளுகிறாள் பேடைமயிலணங்கு
என்றதுகேட்டானே இளவிசயனர்ச்சுனனும்
வாலைப்பிராயமோ வயதுமெத்தச்சென்றவளோ
பதினறுவயதாச்சு பைங்கொடிமாதருக்கு
கொஞ்சம்பிராயம் கொழுந்தெல்லாம்பிஞ்சலவோ
பாதிப்பிராயம் பக்கமெல்லாம்பிஞ்சலவோ
காய்க்கும்பிராயமையா கனியுதிருந்தகற்காலம்
பூர்க்கும்பிராயமையா பிஞ்சுவிடுங்காலமிது
தன்வயதுந்தானறியாள் தையலிளங்கொடியாள்
ஆறுதலாய்வேடுவனே அவளழகைச்சொல்லுமென்றான்

வேடன் பவளக்கொடியா ளழகைச்சொல்வது.

---

ஏதென்றுசொல்வேனையா இளங்கொடியாள் தன்னழ(கை
பார்க்கமுடியாதே பத்தினியாள் தன்னழகை
நீர்மூட்டைபோலிருக்கும் நேரிழையாள் தன்னழகு
சேற்கெண்டைபோலிருக்கும் சென்மொழியாடன்விழி(கள்
மேற்புருவந்தன்னழகோ வேப்பிலைச்சாயதுபோல்
மயிரழகும்பாவனையும் வண்டுமுழுதுகதுபோல்
ஈச்சம்பழத்திலே யிருண்டகறுப்புமுண்டு
நாவற்பழத்திலே நல்லகறுப்புமுண்டு
அவள்-மயிரேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை
அவள்-புருவங்கறுப்பொழிய பின்னேகறுப்புமில்லை
தேய்பிறைச்சாயலைப்போல் திருநெற்றிதன்னழகும்
சிறியமூக்கழகும் சிவந்தமுகத்தமகும்
முத்துப்போல்பல்வரிசை முருக்கிதழ்போற்செவ்வுதடும்
வள்ளைத்தண்டுபோலே வளர்காதிரண்டழகும்
கழுத்தழகும்பாவனையும் கமுகுகுலைசாய்ந்தாற்போல்
அகண்டபுறமழகும் ஆலிலைபோல்தன்வயிறும்
மூனைக்கொமக்கமூங்கிலைப்போல் மொய்குழலாளின்புஜ(மும்
பத்துவிரலழகும் பயிற்றங்காய்நெற்றதுபோல்
சிங்கத்திடைபோலே சீரானயிடையழகும்

இருதுடையிரண்டழகும் யிளவாழைத்தண்டதுபோல்
முத்துசிப்பிதைத்தாற்போல் முழங்காலிரண்டழகும்
பாம்பின்படம்போலே பாதத்திரண்டழகும்
புத்தகஞ்சேர்த்தாற்போல் புறங்காலின்பின்னழகும்
அவளுக்குஒப்பானர் ஆருமில்லைவையகத்தில்
சுவரிலெழுதலாம் சித்திரம்போற்பார்க்கலாம்
படத்திலெழுதலாம் பதுமைபோற்பார்க்கலாம்
சந்திரனைப்போலே துலங்குகிறாள்தோகையரும்
சூரியனைப்போலே துலங்குகிறாள்தோகையரும்
ஈயத்தைக்காய்ச்சி யிலையிலேவிட்டாற்போல்
பொன்னையுருக்கி பூமியிலேவிட்டாற்போல்
தங்கத்தைக்காய்ச்சி தரையிற்கவிழ்ந்தாற்போல்
நீறுபூத்ததீயானை ஊதிபார்த்தநிறம்போலே
ஆயிரம்மின்னலிலே சோதிமின்னல்பிறந்தாற்போல்
பார்க்காமுடியாது பத்தினியாள்தன்னழகை (ர்
அவ்வார்த்தைகேட்டுமவர் அருச்சுனருமேதுசொல்வா
அவளை-மண்டலத்துராசாக்கள் மாலைதரித்தாரோ
கன்னியிளங்கொடிக்குக் கலியாணஞ்செய்தாரோ
விஜயனன்றுகேட்கையிலே வேடுவனுமேதுசொல்வா
நாலுலட்சங்கோடியுண்டு நாயகியைநாடிவந்தோர் (ன்
பத்துலட்சங்கோடியுண்டு பத்தினியைக்கேட்டவர்கள்
வண்ணலட்சங்கோடியுண்டு மாதரைக்கேட்டவர்கள்
கைநீட்டிமாலையிட்டா ரில்லையேகன்னியரை
நித்தியகன்னியாக இருக்கிறாள்நேரிழையும்
நல்லதுவேடுவனே நாயகிமாதவளும்
கன்னியிளங்கொடியுங் கனவேட்டையாடுவளோ
வேட்டைக்குவாரதுண்டா வேடுவனேசொல்லுமென்
மாதாந்தகன்னியரும் வாராளோவேட்டைமுகம் (றார்
ஆனைகேளையாவே அடியேனொருவார்த்தை
மாதமொருபயணம் வனவேட்டைவாரதுண்டு
திங்களொருபயணம் வருவாளேதேன்மொழியாள்
மற்றொருநாளையிலே வருகிறதில்லையென்றார்
ஆனைகேள்வேடுவனே அறியவொருவார்த்தை
காட்டுக்குவந்தாலே கன்னியிளங்கொடியும்
பவளக்கொடியாளும் பரிவேட்டைவந்தாலே
இந்தவனத்திலே யிருக்குமிருகங்களில்

எந்தமிருகத்தின்மேல் இச்சையுண்டுமாதருக்கு
ஆசைகொண்டமிருகமென ஆணழகாசொல்லுமென
ஆனற்கேளையாவே அடியேனொருவிண்ணப்பம்
எந்தமிருகமது எதிர்ப்பட்டுவந்தாலும்
கண்டமிருகமதைக் கண்டிப்பாள்தப்பாமல்
அன்னத்தைக்கண்டாலே ஆசையாய்விட்டிடுவாள்
மற்றொருமிருகமெல்லாம் வாரிப்போரிட்டிடுவாள்
ஏந்திழையாள்கோட்டையது யெத்தனைதூரமுண்டு
பன்னிருகாதவழி பவளம்விளைகிறது
நடுவாயிருக்கிறது நாயகியாள்கோட்டையது
புகழாயிருக்கிறது பொற்கொடியாள்கோட்டையது
ஆனல்நீபோய்வாரும் அன்புள்ளவேடுவனே

அருச்சுனன் பவளக்கொடியாள்மேல் மோகித்தது.

---

வேடுவனும்போனபின்பு விசயனுமேதுரைப்பான்
அச்சுதானந்த ரையரேயென்தோழா
ஆரணங்குவார்த்தைகளை அன்பாகக்கேட்கையிலே
மன்மதபாணமது மார்புருகிப்போகிறதே
சித்தசன்விட்டகணை சிறுமார்புருகிறதே
மாரனவனெய்தகணை மார்பைப்பிளக்கிறதே
அவளை-கண்ணாலேகண்டாலே காமக்களை தீரும்
பார்த்தேனேயாமாகில் பசிதாகந்தீருமென்றான்
என்றைக்குக்காண்பேனோ ஏலப்பசுங்கிளியை
மாலைதரியாமல் வருவதில்லையென்தோழா
பாவையைக்கலியாணம் பண்ணமல்வருவதில்லை
அவளழகைப்பார்ப்பதெப்போ ஆசைதெளிவதெப்போ
கொம்பனையாள்தன்னுடைய குரலோசைகேட்பதெப்
பவளக்கொடிமாதை பார்த்துமகிழ்வதெப்போ (போ
அச்சுதானந்த ரையருமேதுசொல்வார்
என்காணும்வாள்விஜயா இந்தமதியுந்தனுக்கு
மருடத்துரைச்சியவள் வாழ்வரசிஅல்லியற்கு
போய்-மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு வந்தீரேமன்னவனே
மைந்தன்மேலாணை மறந்தீரோவாள்விசயா
மற்றொருகன்னியரை மணமாலைசூட்டினல்

மருடத்துரையல்லியரும் மங்கையவள்பொல்லாதாள்
வாழ்பாண்டிநாடுடையாள் வருவாளேபண்டகூட்டி
சொல்லுக்குமஞ்சாளே தொடர்ந்துபடையெடுப்பாள்
வெட்டித்துணித்திடுவாள் வீரமணிவாளாலே
வேண்டாங்காணென்தோழா வெறுத்துவிடுமிக்கருமம்
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
நீர்-என்னதான்சொன்னாலும் என்செவியிலேறாது
மாதரந்தகன்னியரை மணமாலைசூட்டினக்கால்
சித்தசன்விகாரமது தெளியுங்காணென்தோழா
நான்-செத்துமடிந்து செலவழிந்துபோனாலும்
மாண்டுமடிந்து வைகுண்டம்போனாலும்
செத்தவிடந்தனிலே செங்கழுநீர்பூப்பேன் (ன்
சூடமல்லியாய்ப்பிறந்து கொண்டையிலேபோயிருப்பே
கொண்டைக்குப்பூவாவேன் கொய்வனத்திற்பையாவே
கண்ணுக்குமையாவேன் காலுக்குமெட்டாவேன் (ன்
நாயகியாள்நெற்றியிலே நற்சாந்துப்பொட்டாவேன்
அவள்-முந்தாணித்தொங்கலிலேதொத்தியமுள்ளாவே
என்றுதெளியுமோ யெக்காலஞ்செல்லுமோ (ன்
கைசோர்ந்துமெய்சோர்ந்து கனத்தமுடிசோர்ந்து
கலகலத்துகிலுகிலுத்து காலன்வந்துமேலோடி
நேமங்கெட்டுமதிகுலைந்து நினைவுதடுமாறி
மயங்கிவிழுந்தானே மாதர்மேல்நினைவாகி

பவளக்கொடியாள் வேட்டைக்குவருதல்.

---

அன்றையப்போதையிலே ஆனந்தவாழ்மாரி
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
வேல்பொருதுங்கண்ணாளும் வெளியேபுறப்பட்டாள்
ஈட்டிபிடிமன்னவர்கள் யேழுலட்சம்பத்துலட்சம்
கத்திபிடிமன்னவர்கள் கணக்குமிதங்களில்லை
பட்டயநேரிசமும் பாரியவில்சமுதாடும்
நிமிசாபெரியலகு நேரிசமாம்பெரியகத்தி
கூலிசமுஞ்சூலிசமும் குண்டுகுழல்துப்பாக்கி
எண்ணான்குஆயுதமும் எடுத்தரையிற்கட்டினார்கள்
பாராசாரிபுரவியின்மேல் பவளகன்னியேறினாள்
சுத்திருடைபிடித்தார் சூரியனைத்தான்மறைக்க

ஆள்பெருஞ்சேவகரும் அனந்தங்கோடிசேனைகளும்
தாதிகளும்மூப்பிகளுந் தையல்மார்சூழ்ந்துவர
பத்துலட்சஞ்சேனையுடன் பரிவேட்டைவாராளே
ஆனையின்மேல்பேரிகையும் குதிரையின்மேல்டங்காவும்
ஒட்டையின்மேல்நகபத்து ஓசைகிளம்புகுது
பேய்த்தாரையூதவே பெரியடமராவடிக்க
சின்னமுழங்கவே திருச்சின்னந்தான்முழங்க
ஐங்காதவழிதூரம் அலறுதுபேய்த்தாரை
பயணம்பயணமென்று பயணபேரியடிபடுது
அ-தவனங்களெல்லாம் அதிரவருகிறார்கள்
பொங்குகடல்போலே போய்ப்புகுந்தார்கானகத்தில்
மான்வேட்டையாடியே மயில்வேட்டைதானாடி
குயில்வேட்டையாடியே கொக்குவேட்டைதானாடி
வக்காவுங்கொக்குகளும் கருங்குருவிதாராவும்
அம்புக்கொருகுருவி ஆரணங்குஎய்துவிட்டாள்
தப்பாமற்கொன்று தள்ளிவிட்டாள்கானகத்தில்
வேட்டைகளாடியே விடாய்த்துத்தளர்ந்தாளாம்
கானகத்துமண்டபத்தில் கடுகிவந்திறங்கினார்கள்
பஞ்சணைமெத்தையிலே பதியக்கொலுவிருந்தாள்
தாம்பூலமுண்டு தணியக்கொலுவிருந்தாள்
வாசங்களுண்டு மகிழக்கொலுவிருந்தாள்
கேளிக்கைபார்த்திருந்தாள் கெம்பீரநாயகியாள்
சங்கீதம்பார்த்து இருக்கிறாள்தையனல்லாள்
அப்போவிசயன் அருச்சுனனுந்தானெழுந்து
அச்சுதானந்த ரையர்முகம்பார்த்து
வந்தாள்வந்தாள்காண் மாதரிடங்கொடியாள்
பவளக்கொடியாளும் பைங்கிளியாள்வந்தாள்காண்
கானகத்துமண்டபத்தில் வந்தமர்ந்தாள்கன்னியரும்
மத்தளவோசையது கேட்குதுகாண்மாயவரே
என்னவடிவு எடுப்பேன்காணென்தோழா
என்னவடிவானாலும் எடுத்துக்கொள்ளும்போர்விசயா
அருச்சுனரேவுன்னடக்கை அறிந்துமிருந்துநான்
அலைச்சல்படும்படியாய் அறியாமலுன்பின்வந்தேன்
கதண்டுகொட்டிமடிந்தாற்போல் இருக்கிறேன்கானகத்
நீ-கால்வேறுகைவேறாய் கட்டிகிடத்திவைத்து (தில்
மாயவரேசுத்திவந்து மாரடித்துநீரழுங்காண்

என்னை நீர்சுத்திவந்து யிழவுகொடுத்தழுங்காண்
பெண்ணுய்வடிவெடுத்து போதவழுதிடுங்காண்
மாரிழவுகொடுத்தெனக்கு மயிரெழவு நீர்கொடுங்காண்
குரலோசை நீரெடுத்துக் கூவியழுதாலே
பெண்குரலைக்கேட்டு பொற்கொடியும்வந்திடுவாள்
ஆரென்றுபார்க்கவே வருவாள்காணரணங்கு
ஆரணங்குயிங்குவந்து ஆரென்றுகேட்'..ராக்கால்
மாலையிட்டகணவனென்று மயிலணைக்கு நீருரையும்
தீர்த்தயாத்திரைவந்தோமென்று செப்புங்காண்தேன்
மொழிக்கு,மங்கிலியப்பிச்சைகேளு மாதுமெழுப்பிடுவா
ள், ஆனந்தவாழ்மாரி அவளழகைநான்பார்ப்பேன்
கண்ணுக்குநன்ருனல் கனமாலைசூட்டுகிறேன்
அழகாயிருந்தாலே அவளைமணஞ்செய்திடுவேன்
வடிவுகள்மட்டானல் மதுரைக்குப்போய்விடுவோம்
என்றுசொல்லியர்ச்சுனரும் எம்பெருமானை நினைத்து
பார்த்தீபனருச்சுனரும் பரமனைத்தானினைந்து

அருச்சுனன் கதண்டுகொட்டிசெத்தவன்
போலிருத்தல்.

---

பொந்தியைத்தானடக்கிப் பொட்டெனவேபூமியிலே
மூச்சையடக்கியே மூடிசோர்ந்துகீழ்விழுந்தான்
செத்தவனைப்போலாகச் சோபித்துக்கீழ்விழுந்தான்
மாண்டவனைப்போலாக மன்னவன்கீழ்விழுந்தான்
அச்சுதானந்த ரையரவரேதுசெய்தார்
கால்கைகள்வேருகக் கட்டிக்கிடத்திவைத்து

ஸ்ரீகிருஷ்ணதேவர் பெண்வடிவெடுத்துப்
புலம்பல்.

---

பெண்ணுய்வடிவுகொண்டு போதப்புலம்புகிருள்
தன்னுடையதலைமயிரைத் தானும்விரித்துக்கொண்டு
மன்னவனைச்சுற்றிவந்து மாரடித்துத்தான்விழுந்தாள்
கொற்றவனைச்சுற்றிவந்து கோவென்றழுகலுற்ருள்
மலையேபருவதமே வாட்டமில்லையென்றிருந்தேன்

செம்மலைப்பருவதமே சேதமில்லையென்றிருந்தேன்
செத்துமடிந்தாயோ சிவலோகம்போனாயோ
மாளவோயிங்குவந்தாய் மாபாவிபட்டணத்தில்
சாவவோயிங்குவந்தீர் சண்டாளன்சீமையிலே
உன்னைப்பறிகொடுத்து ஒருத்தியுமாய்ப்போவேனோ
மைத்துனருக்கென்னசொல்வேன் மாமனுற்கென்னசொ
ல்வேன், மன்னவனைச்சுற்றிவந்து மாதுபுலம்பலுற்று
ள், அழுதகுரலோசை ஆரணங்குகேட்டுவிட்டாள்
பவளக்கொடியாளும் பத்தினியாள்கேட்டுவிட்டாள்
ஆடலும்பாடலும அத்தனையுங்கையமர்த்தி
ஆரடாதூதுவரே அடர்ந்தவனந்தனிலே
அழுதகுரலேது ஆராய்ந்துபார்த்துவாரும் (ள்
பெண்குரலாய்க்கேட்கிறதுபோய்ப்பார்த்துவாருமென்று
மாதாசெலவருள வனத்திலொருதூதுவனும்
ஓடினான் தூதுவனும்ஒருநொடியில்போய்நுழைந்தான்
கதண்டுகள்கொட்டியே கானகத்தில்மாண்டவனைக்
கண்டொருத்திபுலம்புவதைக்கண்ணாலேதான்பார்த்து
ஓட்டம்நடையுடனே ஓடிவந்தான் தூதுவனும்
பவளக்கொடிமாதே பத்தினியேயென்னாச்சி
ஆரோவொருத்தியவள் ஆளனுந்தேவியுமாம்
புருஷன்மடிந்துவிட்டான் பெண்ணாள்புலம்புகிறாள்
கதண்டுகொட்டிமாண்டுவிட்டான் கதறிப்புலம்புகிறாள்
அவனையெழுப்பிவிட்டால் அனேகமானபுண்யமுண்டு

பவளக்கொடியாள்வந்து காண்பது.

---

இந்தமொழிகேட்டு எழுந்தாள்பவளகன்னி
முத்துநிரைபல்லக்கில் மொய்குழலுமேறினாள்
மாண்டவன்றன்னருகே வந்துயிறங்கினாள்காண்
அச்சுதாநந்தரென்னு மையர்புலம்புகிறார்
நான்-பாராதநாடுமில்லை பணியாதகோயிலில்லை
மிதியாவனங்களில்லை முழுகாததீர்த்தமில்லை
தேசம்பலபலவாய்த் தீர்த்தங்களாடிவந்தேன்
பூமிபலபலவாய்ப் பிரதட்சணஞ்செய்துவந்தேன்
பவளப்புதுமையிங்கே பார்க்கவந்தேன்மாதாவே
யானையின்மத்தகத்தை யரியுங்கதண்டுமிங்கே

குதிரைசிரசரியுங் குளவியுண்டிவ்வனத்தில்
சிங்கத்தலைபிளக்குஞ் செங்குளவிகொன்றனவே
அறியாமலிங்குவந்தோம் அரும்பாவிபட்டணத்தில்
தெரியாமலிங்குவந்தோம் செனத்துரோகிதேசமதில்
இப்படிவருங்கருமம் யாதொன்றுநானறியேன்
மலையேபருவதமே வாட்டமில்லாக்குஞ்சரமே
செம்மலையேபருவதமே சேதமில்லாச்சுந்தரமே
கல்லான தூணைக் கரையானரித்ததுவோ
இரும்பான தூணையுன்னை உளுவானரித்ததுவோ
செம்பருந்துவந்துவுன்னைச் சிறகாலடித்ததுவோ
மோதிரக்கையதனை முகத்தோடணைந்துகொண்டாள்
கோவென்றசத்தமுடன் கூறியழுகலுற்றாள்
தரையிற்புரண்டழுதாள் தரணியளந்தவரும்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளத்தின்கன்னியரும்
ஆரடிபெண்ணே நீ அழுதுபுலம்புவதேன்
எந்தவூரெந்ததேசம் யெங்கிருந்திங்குவந்தீர்
மாண்டவர்யார்காணும் மாதே நீசொல்லுமென்றாள்

ஸ்ரீகிருஷ்ணர் சொல்வது.

---

ஆனால்கேளம்மா ஆரணங்கேசொல்லுகிறேன்
எங்களுக்குவூருமுண்டோ எங்களுக்குநாடுமுண்டோ
தேசந்திரிபவர்க்குச் சீமைகள்பூமியுண்டோ
நாடுவடக்கேயம்மா நகரிதிருக்காஞ்சி
தேசம்வடக்கேயம்மா திருக்காஞ்சிநந்நகரம்
தீவுபலதிரிந்து தீர்த்தங்களாடிவந்தோம்
பூமியொருபுரமாய்ப் புண்யதீர்த்தமாடிவந்தோம்
பவளப்புதுமையைப் பார்க்கவந்தோமென்தாயே
மாலையிட்டுக்கொண்ட மணவாளனிவர்காணும்
தாலிதரித்துக்கொண்ட தலைவனிவர்காணும்
மார்பளவாய்முகமளவாய் வந்ததுகதண்டுகளும்
மாலைமுடியானை மன்னவனைக்கொன்றுதம்மா
தாலிச்சரடிழந்து தலைவிரிக்கநாளாச்சு
எங்கேயோவானம் இடிக்குதுயென்றிருந்தேன்
தப்பாதேவானந் தலையிலிடித்துதம்மா
அண்ணனில்லைதம்பியில்லை ஆதரிப்பாராருமில்லை

அள்ளியிடுவார்கள் அவனிதனிலாருமில்லை
இருவராய்வந்தோமே ஒருத்திநான்போவேனே
உன்-புண்ணியமாகுது பிழைக்கவழிபாருமென்றாள்
மங்கிலியப்பிச்சையது தாருமம்மாமாதாவே
உன்-தருமமாய்ப்போகுதம்மா தாயேமுகம்பாரும்
மூத்தாளையேந்திவந்து முன்னாலேநின்றழுதாள்
மடிப்பிச்சைதாருமென்று மடியேந்திநின்றாளே
பக்கத்தில்நின்றதொரு பாங்கியருமேதுசொல்வார்
பவளக்கொடியாளே பத்தினியேயென்னாச்சி
ஆரோவொருத்தன் அவனைக்கதண்டுகொட்டி
செத்துக்கிடக்கிறான் சேயிழையாள் அவனைச்சுத்தி
மாரிழவுதான்கொடுத்து மண்ணிலழுகிறாள்
அவனையெழுப்பினால் ஆச்சியரேபுண்ணியமுண்டு
வாலைப்பிராயமம்மா வயதுபதினாறளவே
அவிந்தவிளக்கேற்றிவைத்தால் அனேகதர்மமுண்டன
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாள்கேட்டு (வே
பாசாங்குகள்ளியைப் பாற்பிடித்துத்தள்ளுங்கடி
என்று-மேகமலைபோலே மெள்ள நடந்துவந்து
அவன்-காலைப்பிடித்துக் கரியமுடியசக்கி
பார்த்தன்திருமுகத்தைப் பார்த்தாள்பலசாலும்
மேலேயிருக்கிற முக்காட்டைவாங்கியல்லோ
உற்றுற்றுப்பார்த்தாளே ஒளிபிறந்தகண்ணாலே
வானவர்கள்பெண்டுகளை வலதழிக்குங்கள்ளனடி
மட்டிலாப்பெண்டுகளை வகைமோசஞ்செய்தவண்டி
தேசத்துமாதர்களைச் சிறையெடுக்குங்கள்ளனடி
பிரட்டுங்கள்தாதிகளே பின்னழகைப்பார்ப்போமென்றா
தாமக்கருங்குழலாள் தாதிபுரட்டலுற்றாள் (ள்
முன்னழகும்பின்னழகும் முதுகில்மட்சரேகைகளும்
தோளில்துளபமாலை தொப்புளிலேயமிர்தகலசம்
பல்லிற்பரசவீணை பாதத்திற்செந்தாமரை
மீசைமுருக்கழகும் விழியின்திருவழகும்
நாவிலேநட்சத்திரம் நயனவிழிப்பாவனையும்
பதினெட்டுலட்சணமும் பார்த்தாளேபத்தினியாள்
தேவாதிபிண்டமடி சுவாமிக்குமைத்துனண்டி
பேராற்பெரிய பெருமாளவர்மைத்துனண்டி
இவனையெழுப்பினால் எனக்குவருமோசமென்று

பவளக்கொடியறுத்துப் பார்த்தீபனைக்கட்டுமென்றாள்
பவளக்கொடியறுத்துப் பாங்கிமார்கட்ட லுற்றார்
அப்போ தருச்சுனனும் ஆயனைத்தானினைத்து
வாழ்விஜயனருச்சுனனும் மாயனைத்தானினைத்து
எப்படியோவுன் தயவு எம்பெருமாளேகவர்று
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத்தஞ்சமென்பேன்
அரிராமர்மாயவரே அருகிருந்துகாருமென்றார்
கட்டினதேயுண்டானல் கழற்றவேபாருமென்றார்
மனதில் நினைந்தானே வாள்விசயனர்ச்சுனனும்
பவளக்கொடியாலே பாங்கிமார்கட்டினார்கள்
கட்டுங்கொடிகளது கடுகவேயிற்றுதங்கே
ஆனைகட்டுஞ்சங்கிலியால் அர்ச்சுனனைக்கட்டினார்கள்
ஆயன் தயவாலே அரிராமர்கிருபையினல்
அத்தையும்விம்மி அறுத்தானருச்சுனனும்
மார்பின்சரப்பளியை வாங்கியவள்கொடுத்து
கெட்டியாய்க்கட்டுமென்று கிட்டவந்துநின்றாளே
மாணிக்கச்சரப்பளியால் வலித்திறுக்கிக்கட்டினார்கள்
அவன்-காலையசுக்குகிற கால்சேஷ்டைமெத்தவுண்டு
கையையசக்குகிற கைசேஷ்டைமெத்தவுண்டு
இங்கேயிருந்தாலே யெனக்குவருமோசமென்று
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
பல்லக்கின்மீதேறிப் பாங்கியர்கள்சூழ்ந்துவர
எந்திழைமார்சூழவே வந் திறங்கினாள்மண்டபத்தில்
வாள்விசயனருச்சுனனும் மாணிக்கச்சங்கிலியின்
கட்டையவிழ்த்தவனுங் கடுகவெழுந்தானே
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
ஆயிரந்தோழருக்கு அரியசிகாமணியே
கண்டீரோகோமா நீ கன்னியுடலட்சணத்தை
பார்த்தீரோயென்தோழா பவளக்கொடிலட்சணத்தை
இவளுக்குப்ஒப்பானார் யாருமில்லைவையகத்தில்
ஈஸ்வரன்தேவி ஈஸ்பரியாளீடுமல்ல
இராமருடதேவி இலட்சிமியுமீடுமல்ல
சதுர்முகனுடதேவி சரஸ்வதியுமீடுமல்ல
எமனுடதேவி மோககன்னியீடுமல்ல
இந்திரனர்தன்தேவி யிந்ராணியீடுமல்ல
சந்திரனர்தேவி ரோகணியுமீடுமல்ல

சூரியனூர்தேவிசாயாதேவியீடுமல்ல
கந்தருடதேவி கனகவல்ளியீடுமல்ல
மன்மதன்தேவி ரதிமாதுயீடுமல்ல
ஆருடைய அழகுக்கு ஒப்பிடுவேனூரணங்கை
வேரிற்பவளமது மின்னுகிறகாந்திகண்டாய்
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்தன்னொளியாம்
கண்ணாலேபார்க்க முடியவில்லைகன்னியரை
எப்படிதான்மறந்து இவளைவிட்டுநான்போவேன்
இறப்புக்கும்பிறப்புக்கு மினியொருபெண்வேணுமோ
இவளை-மாலைதரியாமல் வருவதொருநாளுமில்லை
இவளாலேயென் னுயிரும் இழக்கிறதுதப்பாது
அச்சுதானந்த ரையருந்தான்கேட்டு
ஏன்காணும்வாள்விஜயா இந்தமதியுந்தனுக்கு
தோஷமாலைபோட்டதொரு தோழிமார்தங்களிலும்
பாஞ்சாலன்பெற்றபெண்ணை பத்தினியைமாலையிட்டீர்
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
எத்தனைதுதங்கை சுபத்திரையைமாலையிட்டீர்
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
அகத்தியனூர்பெற்றெடுத்த அருங்கிளியாள்போகவதி
அவளிலுமெத்த ஆரணங்கிவளழகோ
மேகம்பயின்றெடுத்த மின்னொளியைமாலையிட்டீர்
அவளிலுமிவளழகோ ஆனந்தவாழ்மார்பா
மதுரைதுரையல்லியரை மாலையிட்டீர்வாள்விசயா
அவளிலுமிவளழகோ ஆரணங்குபெண்மயிலாள்
மெல்லியரைப்பார்க்கிலும் மிச்சமுண்டோயிவளழகு
வேண்டாங்காண் வாள்விசயா வெறுத்துவிடு மிவளா (சை
ஏழுலட்சந்தேவிமா ரெல்லோருந்தானிருக்க
மாதொருத்திக்காகவே மயங்கியழுவானேன்
காண்டாவனமெரித்த காளையவன்கூறுவான்
நீர்-என்னதான்சொன்னாலு மென்செவியிலேறாது
மாதத்தக்கன்னியரை மணமாலைசூட்டினால்
என்னுடையசீவன் இருக்குங்காணென்தோழா
எண்ணப்படிமுடிக்க வேண்டுங்காணீஸ்பரரே
இருவருமாகவே இருக்கின்றவேளையிலே
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடிநாயகமும்
பொழுதுசரிந்தது போகவேண்டும்மாளிகைக்கு

மார்பின்சரப்பளியை வாங்கிவா தாதியென்ருள்
அப்போது தாதிமார் அதிதுரிதமாகவந்து
ஆர்கா ணும்மன்னவனே அழகானஐயாவே
ஆச்சியர்கட்டிவைத்த அழகுசரப்பளியை
கட்டிவைத்துப்போனதைக் கடுகவேதாருமென்ருள்
பொழுதுசரிந்தது போருளரண்மனைக்கு
மார்பின்சரப்பளியை மன்னுகொடுத்திடென்ருள்
திட்டென்றெழுந்திருந்து தேர்விசயனே துரைப்பான்
உங்கள்-கோட்டைகளேறி குதித்தனோடி கொம்பனையே
அரண்மனையேறி குதித்தனோடி ஆரணங்கே
மதிலேறிகுதித்தேனோ மாதுநல்லாள்கோட்டையிலே
பெட்டியெடுத்தேனோ பொக்கிஷந்திருடினேனோ
மாதவள்கையை வலியவந்துதொட்டேனோ
கள்ளன்திருடனைப்போல் கன்னமிட்டுப்போனேனோ
என்னகுற்றஞ்செய்தேனுன் என்னையவள்தானும்
கட்டழகிமாதிவளுங் கட்டிவைத்துப்போனாளே
கள்ளனைப்போலாகக் கட்டவும்நியாயமுண்டோ
திருடனைப்போலாகச் சேர்த்துகட்டநியாயமுண்டோ
கட்டினால்தீருமோ கன்னியவளாசை
கட்டியமாதுயென்னைக் காட்டில்விட்டுப்போகலாமோ
கூடவழைத்தலவோ போகவேணுங்கொம்பனையாள்
அரண்மனைக்குயென்னை அழைத்துப்போகலாகாதோ
என்னசுதந்தரத்தால் என்னையவள்கட்டிவைத்தாள்
அம்மான்மகனென்று ஆசையாய்க்கட்டினாளோ
அத்தைமகனென்று அன்பாகக்கட்டினாளோ
வாகானகன்னியென்று மணமாலைசூட்டினேனோ
வடிவானகன்னியென்று வாழ்மணஞ்செய்தேனோ
என்னசுதந்தரத்தால் என்னையவள்கட்டிவைத்தாள்
கையிலகப்பட்டதை விடுவேனுகன்னியரே
மார்பின்சரப்பளியை மாதேகொடுக்கேனடி
வலியவந்தபாக்கியத்தை விடுவேனுமாதரசே
சண்டைக்குவேண்டுமென்ருய் சரியாகவாறேனடி
அவளுக்குஅஞ்சுவேனோ ஆனந்தவாழ்மாரி
என்றதுகேட்டு ஏதுசொல்வாள் தாதியவள்
உந்தனுக்குச்செய்த உபகாரமத்தனையும்
வேங்கைக்குச்செய்த விஷதாரியாச்சுதடா

செத்திடத்தில்செத்து செல்லுளுத்துப்போகாமல்
மாண்டிடத்தில்மாண்டு மண்ணுளுத்துப்போகாமல்
எழுப்பிவிட்டதோஷமோ இத்தனையும்பேசுகிருய்
ஆகடியம்பேசுதற்கு அடுக்குமோவுந்தனுக்கு
என்றதுசொல்லியே நடந்தாலிளங்கொடியாள்
வாயுவேகமாகவே வந்தாளேமண்டபத்தில்
பவளக்கொடிமாதுக்குப் பாதத்தில்தெண்டனிட்டாள்
கைகட்டிவாய்புதைத்துக் கன்னியருமேதுரைப்பாள்
மார்பின்சரப்பளியை மன்னவனைப்போய்க்கேட்டேன்
என்னென்று சொல்லுவேன் இடிவிழுவான் சொன்ன
பொழுதுசரிந்தது போகிருேமரண்மனைக்கு (சொல்லை
மார்பின்சரப்பளியை மன்னவரேதாருமென்றேன்(ளும்
அவன் - வம்பானவார்த்தைகளும் இடும்பானபேச்சுக
ளக்கரிவான்சொன்னசொல்லை மொய்குழற்குச்சொல்ல
லுற்றுள், அப்போதேசொன்னேனே தப்புவருமென்
றுசொல்லி, அவனையெழுப்புவது ஆகாதுயென்றுசொ
ன்னேன், நமக்குவினையாச்சே என்று நான்சொன்னே
னே, பொன்னுஞ்சரப்பளியும் போனுலும்போகட்டும்
மாளிகைக்குநாம்போவோம் மாதேபயணமிடு
என்றதுசொன்னவுடன் இளவிசயனருச்சுனனும்
அச்சுதானந்த ரையர்முகம்நோக்கி
என்னவடிவு எடுக்கலாமென்தோழா
அன்னத்தின்மேலே ஆசையுண்டுமாதருக்கு
வேடனைப்போலாக வேஷமெடுங்காணும்
என்னைவிலைகூறி யெடுத்துப்போய்ஏந்திழைமுன்
பார்த்தாசைப்பட்டலவோ பரிந்துவிலைகேட்பாள்
ஆயிரம்பொன்னென்றுசொல்லி அவள்கையில் நீர்கொ
ஊருக்குநேர்கிழக்கே விநாயகர்கோவிலண்டை (டுத்து
அங்கேபோய் நீரிருங்காண் அச்சுதா நான்வாரேன்
மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
ஆயன்பெருமாளை அப்போநினைந்தானே
எம்பெருமாளேகவர்ணு ஏழுலகளந்தமாயா
முட்டையின்குஞ்சை முகமறியாப்பாலகனை
பிட்டுவளர்த்தீரே பிரபலியமாகவென்று
மூக்காலேமுள்பொறுக்கி முழுமரத்திற்கூண்டுகட்டி
காக்கையின்குஞ்சுகளை கருதிவளர்த்தீரே

உன்னையேநம்பி உயிர்கொண்டுலாவுகிறேன்
மாதுபவளக்கொடியை மணமாலைசூட்டுகிறேன்
அன்னவடிவாக ஆண்டவனே நீர்கொடென்றார்

ஸ்ரீகிருஷ்ணர் அர்ச்சுனனுக்கு அன்னவடிவு கொடுத்தல்.

---

அருச்சுனன்தானினைக்க ஆயனதுவறிந்து
அன்னவடிவாக ஆயன்வரங்கொடுத்தார்
ஆணுலழகுமன்னன் அன்னத்தைப்போலானான்
செட்டையழகென்ன சிருடையநெற்றியென்ன
காலினழகென்ன கழுத்தினழகென்ன
கண்ணினழகென்ன காதுவடிவழகே
மூக்கினழகென்ன மூனைமயிரும்பாவனையும்
கூவுங்குரலழகன் குலுங்கும்நடையழகன்
அருச்சுனராசனவன் அன்னவடிவானான்

ஸ்ரீகிருஷ்ணதேவர் வேடவுருவெடுத்தல்.

---

அச்சுதானந்தரையர்பெருமாளும்
காட்டுக்கிழங்கெடுக்கும் கனவேடன்போலானார் (ம்
காற்செருப்புந்தோல்குல்லாவுங்கைதனிலேமான்வலையு
பன்றிகுத்தும்பலலயமும் பாரிசமுங்கைபிடித்து
கோட்டையிட்டதுப்பாக்கி குண்டுகுழல்கைபிடித்து
கருநாயுஞ்சங்கிலியுங் கைதனிலேதான்பிடித்து (ல்
அன்னத்தைஏந்திகொண்டு அவன்வாரான்கானகத்தி
பவளக்கொடியாள் பத்தினியாள்தானிருக்கும்
மண்டபத்துவழியாக வருகிறான்வேடனவன்
ஆரணங்குதோழிமார் அன்னத்தைத்தான்பார்த்து
ஆரடாவேடுவனே அன்னத்தைவிற்கிறவன்
விற்றீரேயாமானல் வேண்டியபொன்தாரேனென்றாள்
அப்படியேநல்லதென்றான் அழகுள்ளவேடனவன்
ஓடியேவந்தார்கள் உத்தமிமுன்தாதியர்கள்
பவளக்கொடியாளின் பாதத்திற்போய்ப்பணிந்து
ஆரோவொருவேடன் அன்னத்தைவிற்கவந்தான்
அன்னத்தைப்பார்த்தால் அழகாயிருக்குதம்மா



ஸ்ரீகிருஷ்ணர் அர்ச்சனனுக்கு அன்னவழி கொடுத்தல்.

கண்ணிட்டுப்பார்க்கவே காணவேமுடியாது
நான்-எங்கிலும்பார்த்ததில்லை இயலான அன்னமது
வைத்துவளர்க்கலாம் வாங்குமம்மா ஆச்சியென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அன்னநடைமாது
அந்தநல்லவேடுவனை அழைத்தோடிவாருமென்றாள்
ஓடினாள் தாதியரும் ஒருநொடியில்வேடனண்டை
ஆரடாவேடுவனே ஆச்சியழைக்கின்றாள்
அன்னத்தைக்கொண்டுவாடா அழகுள்ளவேடுவனே
என்றதுசொல்லையிலே இசைந்துவழி நடந்தான்
பவளக்கொடியாள் பத்தினியாள்முன்னேவந்தான்
கண்டாள்பவளக்கொடி கட்டழகியன்னமதை
என்னப்பாவேடுவனே யென்னவிலையன்னமென்றாள்
ஆயிரம்பொன்கொடுத்தா லன்னம்தருவேனென்றான்
ஆரடிதாதிகளே அளந்துபொன்கொடுத்திடென்றாள்
அன்னத்தைவாங்கி அழகாய்மடியில்வைத்தாள்
மூக்கினால்அர்ச்சுனனும் முன்மார்பில்குத்தலுற்றான்
மார்பில்ஸ்தனத்தையவன் வாயால்பிடித்திழுப்பான்
முகத்தோடேமுகமணைவான் முத்தங்கொடுத்திடுவான்
பவளக்கொடியாளும் பத்தினியாளேதுசொல்வாள்
என்னடாவேடுவனே இப்படிமேல்விழுது
ஆரிழையாளென்தங்கை அவள்வளர்த்த அன்னமிது
பெண்டுகளென்றால் பிரியமாய்மேல்விழுமே
ஆசையாய்முத்தமிட்டு அணைத்துவிளையாடும்
சீராய்வளர்த்திடென்று செப்பிவழிநடந்தான்
ஆரடிதாதிகளே அலங்காரச்செங்கமலம்
இந்தஅன்னமெப்போ திரைகளெடுத்துதோ
போசனங்கொண்டுவாடி யென்றாளேபொற்கொடியும்
மாம்பழம்பலாப்பழமும் மலைவாழைரஸ்தாளி
கரிவாழைசெவ்வாழை காட்டுவிளாம்பழமும்
கொண்டுவந்துவைத்தாளே கொம்பனையாள்முன்னே
அன்னமதற்கூட்டி ஆவல்தெளியவைத்து (தான்
ஆரடிதாதிகளே அழையுங்கள் தச்சனைத்தான்
ஈழத்துத்தச்சனை இக்ஷணமேயழையுமென்றாள்
ஓடினார்தாதியர்கள் ஒருநொடியிலிட்டுவந்தார்
வந்துபணிந்தானே வரிசையுள்ளதச்சனவன்
என்னையழைத்தது எதுகருமமென்றான்

அன்னமது தானிருக்க அழகுகூண்டுபண்ணுமென்றாள்
சொன்னவுடன் தச்சன் சீக்கிரத்தில் சொப்பனிட்டான்
சோடித்துவைத்தவனுந் தெண்டனிட்டுபோய் நடந்தா
அன்னத்தைத்தானெடுத்து ஆவலுடன் முத்தமிட்டு (ன்
கூண்டிலடைத்தவளும் கொப்பெனவே தானெழுந்தா
ஏறினாள் பல்லக்கில் எடுத்தார் நெடுங்குடைகள் (ள்
பக்கம் நிறைந்தார்கள் பாங்கிகளுந் தோப்புகளும்
சுற்றிநிறைந்தார்கள் தோழிகளில் மூப்பிகளும்
ஆனைமேல் பேரிகை அடிபடுது கோடிவகை
ஒட்டையின்மேல் நகபத்து ஓசைமுழங்குறது
முழங்கவே மேளதாளம் மொய்குழலும் வாராளே
காடுகடந்து கரியமலைதான்கடந்து
வனமாய்வனங்கடந்து வாழ்மனைக்குவாராளாம்
தெத்துக்கடந்தாள் தெருவீதிதான்கடந்தாள்
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதியது அரண்மனையுந்தான்கடந்து
மாடத்தெருவீதி மயிலணையுந்தான்கடந்து
கோபுரவாசலண்டை கொம்பனையாள் வந்துநின்று (ல்
மாளிகையினுள் நுழைந்துவந்தாள் கொலுமண்டபத்தி
சிங்காரமண்டபத்தில் தேன்மொழியாள் போய்சேர்ந்தா
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான் (ள்
பொழுதுமறைந்தது போதவிருளாச்சு
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
அன்னத்தைக்கொண்டவிலை அறிவீர்கள் ராதியரே
மாடத்தில்கூடத்தில் கட்டாதேமங்கையரே
நற்பவளத்தூணு நடுவாகக்கட்டுமென்றாள்
சலவைசப்ரமண்டபத்தில் தான்வைத்துக்கட்டலுற்றார்
பாரித்திருந்தானே பாரமெத்ததோணுகைக்கு
அடி-அக்கமாரே தங்கைமாரே அன்னமெத்தபாரமடி
மஞ்சமலங்கரித்து மண்டபத்துச்சங்கிலியால்
வைத்திழுத்துக்கட்டினார் மன்னவரர்ச்சுனரை
பவளக்கொடியாளுடைய பஞ்சணைமேலாக
நற்பவளத்தூணடுவே நலமாகக்கட்டினார்கள்
பவளக்கொடியாளும் பத்தினியாளப்போது
தீர்த்தங்கள்வாங்கியே திருவாயுங்கைகழுவி
போசனங்களுண்டு புனல்வார்த்துக்கைதுவட்டி

பஞ்சணைச்சாலையுடன் படுக்கையறைசோடியென்றுள்
கடுகவெழுந்தார்கள் கட்டழகிதாதியரும்
கண்மூன்றுடைய கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி
காம்பரிந்தலுங்கலப்பூ கட்டிலின்மேல்பரப்பி
கால்கோட்டைகைகோட்டை யிட்டநந்தகாரிகைக்கு
ஒருகுதலையணையா மொய்யாரப்பஞ்சணையாம்
அன்னவூசல்மேலே அழகாகசோடித்தார்
அத்தர்புனுகுகளை அள்ளித்தெளித்தார்கள்
கதம்பகஸ்தூரிகளை கரைத்துத்தெளித்தார்கள்
சந்தனமுங்குங்குமமும் சவ்வாதுந்தான்தெளித்து
சாம்ராணிவாடைகளும் சந்தனப்புகைகொடுத்தார்
பஞ்சணைமெத்தையண்டை தம்பலவட்டிலவைத்தார்
காச்சாகளிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரஞ்சிபாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
வாகாயிலைச்சுருளும் வர்ணத்துவர்பாக்கும்
கொத்துத்துவர்பாக்கும் கோவையிலைச்சுருளும்
முத்துசுட்டசுண்ணாம்பும் மொய்குழற்குவைத்தார்கள்
கெண்டியில்தீர்த்தமும் கொண்டுவந்துவைத்தார்கள்
குத்துவிளக்கும் குடவிளக்குமேற்றிவைத்தார்
மாடவிளக்கும் மயில்விளக்குமேற்றிவைத்தார்
ஆயிரம்பெருவிளக்கவ் வாசலிலேற்றிவைத்தார் (ர்
சோடித்தோமம்மாவென சொல்லியேதெண்டனிட்டா
அப்போ-பவளக்கொடியாளும் பத்தினியுந்தானெழுந்
காவல்பதினெண் வாசல் காக்கிறதாதியர்கள் (து
பத்தியம்காவல் [illegible] பஞ்சணையில்போயிருந்தாள்
பள்ளியறைச்சாலையிலே பைங்கிளியும்போயிருந்தாள்
காயாரக்காய்த்த கமுகினிளம்பாக்கும்
வாயாரத்தின்றவளும் மலரணையிற்பள்ளிகொண்டாள்
நிமிசாபெரியலகு நேரிசமாம்பெரியகத்தி
மந்திரவாளுருவி மார்மேலேசாத்திக்கொண்டாள்
பவளக்கொடியாளும் பள்ளிகொண்டாளப்போது
அங்கங்கேதாதிமார் அனைவோரும்பள்ளிகொண்டார்

அருச்சுனராசன் அன்னவடிவைவிட்டு
மனிதரூப மாகுதல்.

---

அனந்தல்நெடுநாழி சென்றபிறகாக
ஆணழகனருச்சுனனும் ஆயனைத்தானினைந்து
மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
கூண்டைத்திறந்தவனும் கொப்பெனவேரூபமானான்
அன்னவடிவைவிட்டு ஆள்ரூபமானானே
பொல்லாதகாதல் புலம்புதுகௌளியது
வன்குரலில்பல்லியது வலப்புறமாய்ச்சொல்லுகுது
எழும்பியகாதலை எண்ணியவள்பார்ப்பளவில்
ஆள்வரத்தாகவே அக்கௌளிசொல்லுகுது
அடுத்தடுத்துசொல்லுவதும் ஆள்வரத்தாய் காணுவ (தும்
இத்தனைநாளாக இல்லாதகௌளியது
ஒருநாளுஞ்சொல்லாதேஉச்சிதமாய்ச்சொல்லுதிப்போ
காட்டிலிருந்தவர்கள் கள்ளரோநானறியேன்
ஆரம்பம்பண்ணுமல் அழுதாற்போலேயிருந்தாள்
பின்னுமரைநாழி பொறுத்தபிறகாக
பொல்லாதகாதல் எழும்பிற்றுபொற்கொடிக்கு
எழும்பியகாதலை எண்ணியவள்பார்ப்பளவில் (ம்
அடுத்தடுத்துசொல்லுவதும்ஆள்வரத்தாய்காணுவது
எண்ணிகலங்கி இளங்கொடியாளேதுசொல்வாள்
ஆரடிதாதிகளே அலங்காரச்செங்கமலம்
பஞ்சணைமேலாகப் பாங்கியரேபள்ளிகொண்டேன்
ஒருநாளுஞ்சொல்லாத உச்சிதகௌளியது
வலப்புறத்துப்பல்லி வடபுறமாய்ச்சொல்லுதடி
கௌளியின்சாஸ்திரத்தை ஆராய்ந்துபாரடி நீ
என்றதுகேட்டவுடன் இளங்கொடியாள்தாதியர்கள்
அவளறிந்தசாஸ்திரத்தை ஆராய்ந்துபார்க்கலுற்றாள்
ஆரோதெரியாது ஆள்வருத்தாய்க்காணுதென்றாள்
அவ்வார்த்தைகேட்டுமவள் ஆரணங்குவதுரைப்பாள்
காவல்பதினெட்டுவாசல் காக்கிறமங்கையர்கள்
பத்திரமாகவே காத்திடுங்கள்பைங்கொடியே
எச்சரிக்கையாகவே யிருங்களடிகாவலிலே
தப்பிதமுண்டானால் தலையைத்தறித்திடுவேன்

காவலுடையவற்கு கட்டுதிட்டம்பண்ணிவைத்தாள்
பவளக்கொடியாள் பத்தினியாள்சொற்படிக்கு
பதினெட்டுவாசலுள்ளார் பத்திரமாய்க்காக்கலுற்றார்
அன்னவூசல்மேலாக ஆரணங்குபள்ளிகொண்டாள்
பின்னுமொருநாழி பொறுத்தபிறகாக
கண்டாவனமெரித்த காளையெழுந்திருந்து
எப்படிக்குயிவளுடனே யிணங்கிமருவிடுவேன்
மூச்சைப்பிடித்தவனும் விளக்கையணைத்துவிட்டான்
கொம்பனையாள்மெத்தையை கொப்பெனவசக்கிவிட்டா(ன்)
பஞ்சணைமெத்தையிலே மணிகளசைந்ததுகாண்
பொட்டெனவிழித்துப் பொற்கொடியும்பார்த்தாளே
மந்திரவாளாலே வீசினாள்மாதுகன்னி
முன்லாகையாகாமல் பின்லாகையால்குதித்தான்
நற்பவளத்தூணு நடுவாகயிற்றதுகாண்
வெட்டவிழுந்தது வீரமணிவாளாலே
பவளக்கொடியாளும் பத்தினியாளேதுசொல்வாள்
வானவர்கள்தேவர்களும் வந்தாரோவாசலுக்கு
வானவர்களானக்கால் வாள்முனைக்குத்தப்பிடுவார்
மனுஷரூபமானக்கால் மாண்டுமடிந்திடுவார்
என்றதுசொல்லி இளங்கொடியாள்தான்படுத்தாள்
பின்னுமொருநாழி பொறுத்தபிறகாக
ஆனந்தமார்பனவன் அர்ச்சுனராசதுரை
மஞ்சத்தைதான்பிடித்து மன்னனசக்கிவிட்டான்
அரைவடமும்கிண்கிணியு மசைந்துகிடுகிடென்ன
அன்னமும்பொன்மயிலும் ஆடிற்றுவோசையுடன்
மஞ்சம்பிரண்டது மணிகளசைந்ததுகாண்
வேல்பொருதுங்கண்ணாளும் வீசலுற்றாளந்நேரம்
வீசினவாளும் வேந்தரவரர்ச்சுனரும்
முன்லாகையாகாமல் பின்லாகையால்குதித்தார்
நற்பவளத்தூணு நடுவாகயிற்றதுகாண்
கண்விழித்துப்பார்த்தாளே கட்டழகிமாதுகன்னி
நாட்டிலிருந்தவொரு கள்ளன்திருடனோ
வானவர்கள்தேவர்கள் வந்தாரோ நானறியேன்
மஞ்சம்புரளுவதேன் மணிகளசைவானேன்
வானவர்களென்றாலென் வாள்முனைக்குத்தப்பிடுவார்
ஆள்ரூபமானால் அவர்பிழைக்கப்போறதில்லை

எடுத்துப்பார்த்தாளே யிளங்கொடியாளர்ச்சுனனை
மன்னன்முதுகிலே மட்சரேகைகண்டாளே
அப்போவிஜயன் அர்ச்சுனனுமேதுரைப்பான்
உன்-வாசலுக்குவானவர்கள் தேவர்களும்வாராரோ
நான்-தேவாதிபிண்டமடி தேர்விஜயனர்ச்சுனனும்
மாயனெம்பெருமானுக்கு மைத்துனன் நான்தாண்டி
பல்லொளியைக்காட்டினுன் பவளக்கொடியாட்கு (ன்
பல்லொளிவைத்தான்காட்டி பார்த்துநகைத்துவிட்டா
பல்லொளிகண்டவுடன்பவளக்கொடிசோர்ந்துவிட்டா
சோர்ந்துமயங்கியவள் சொரணைதப்பிக்கீழ்விழுந்தாள்
ஆணலழகுமன்னன் அர்ச்சுனன்தானெழுந்து
சாயமணிக்கவுரி சந்தனத்தானூதுவந்தி
வீசினகளைதெளிய வெண்சாமரைகவுரி
வீசக்களைதெளிந்து மெல்லியருங்கண்விழித்து
கற்பழியாக்கன்னியரும் கற்பழிந்துபோனுளே
கற்பழிந்துபோனேனென்று கன்னிபுலம்புகிருள்
அப்போவிஜயன் அர்ச்சுனனுமேதுசொல்வான்
நீதானேகற்பழிந்தாய் நேரிழைநாயகமே
கற்பழிந்தமாதர்களைக் கன்னியரேசொல்கிறேன்கேள்
தீயிற்பிறந்தவளும் தென்னுடன்பாவையரும்
மேகம்பயின்றெடுத்த மின்னெளிநாயகமும்
நாகம்பயின்றெடுத்த நறுநுதலாள்கன்னியரும்
அச்சுதன்தங்கையவள் ஆரணங்குசுபத்திரையாள்
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியல்லியரும்
நான்-கற்பழித்தமாதர்கள் கணக்குமிதங்களில்லை
என்றதுகேட்டு இளங்கொடியாளேதுசொல்வாள்
எத்தேசகாலமும் இதுவேதொழில்தானே
எப்போதுமெந்தனுக்கு இதுவேதொழில்தாண்டி
குருகுலவம்மிசத்தில் குந்திவயிற்றிலே
ஐவருடன்பிறந்தேன் ஆனந்தவாழ்மாரி
அவனிமுழுதும் ஆளுகிருர்தர்மலிங்கம்
நான்-தேவியைக்கொள்கிறதுஞ் செல்வரையீனுறதும்
இதுவேதொழிலாக இருக்கிறேனேந்திழையே
மன்னவருந்தேவியரும் மனதுறவானபின்பு
உன்மேல்மயலாகி உ ாதனைச்சேரவென்று
அன்னவடிவதுதான் கொண்டேனே ஆரணங்கே

வேடனூர்கைதனிலே விலையாகக்கொண்டீரே
அத்தாலுஞ்சாடை அறியாமற்போனையடி
ஆளனுந்தேவியுமாய் அக்காட்டில்நானிருந்தேன்
கதண்டுகொட்டி செத்தவனைப் போலாகநானிருந்தேன்
பவளக்கொடியறுத்துக் கட்டிவைத்தாய்பத்தினியே
கட்டுங்கொடியை அறுத்தேனடிகன்னியரே
அத்தாலுஞ்சாடை அறியாமற்போனையடி
யானைகட்டுஞ்சங்கிலியால் ஆரணங்கேகட்டிவைத்தாய்
சங்கிலியை நானறுத்துப் போட்டேனேதையலரே
அத்தாலுஞ்சாடை அறியாமற்போனையடி (ய்
உன்-மார்பின்சரப்பளியால் வரிந்தென்னைக்கட்டிவைத்தா
உன்-தாதியரை நீயனுப்பி வாங்கிவரச்சொன்னாயே (டி
சொல்லாதவார்த்தையெல்லாஞ் சொல்லியனுப்பினண்
உன்னை-திட்டியனுப்பினண்டி நீங்காகச்சொன்னேனடி
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனையடி
அன்னவடிவு யெடுத்தேனே ஆரணங்கே
வேடனூர்கொண்டுவர விலைகொடுத்துவாங்கினையே
உன்-முத்துஸ்தனத்தை நான் குத்திவலித்தேனே
மார்பின்சதையை நான் குத்திவலித்தேனே
அத்தாலுஞ்சாடை அறியாமற்போனையடி
வேடனைப்போலாக வந்தவனுமென்தோழன்
அன்னத்தைதாதியர்க ளரண்மனையிற் கட்டிவைத்தார்
பவளக்கால்மண்டபத்தில் பத்தினியேகட்டிவைத்தார்
அன்னவடிவைவிட்டு ஆள்ரூபமானேனடி
பஞ்சணைமெத்தையை அசைத்தேன்மணியசைய
அத்தாலுஞ்சாடை யறியாமற்போனையடி
உனக்கு-அழகேபெரிதுகண்டாய் ஆண்மைகள்போதா
ருடத்துரைச்சியவள் வாழ்வரசியல்லிநல்லாள் (து
ல்லியவளுடைய ஆண்மையுனக்கில்லையடி
வையெல்லாஞ்சொல்லியே சிரித்தானிளவிசையன்
பவளக்கொடிமாது பத்தினியுமேதுசொல்வாள்
தோழருநீருமாய் வந்தேனென்றீர்சுந்தரரே
அருகேவந்ததோழரவர் ஆணழகாயெங்கேயென்றார்
க்கு அப்பாலே பிள்ளையார்கோவிலண்டை
யார்கோயிலண்டை யிருக்கிறானென்தோழன்

இட்டவரச்சொன்னாலே இக்ஷணமேநானழைப்பேன்
ஆனாலழைத்துவா ஆணழகாதோழனைத்தான்

## பவளக்கொடியாள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியை அழைத்துவர அர்ச்சுனராசனை அனுப்புதல்.

என்றதுகேட்டு இளவிஜயனேதுசொல்வான்
எந்தவழியாக இளங்கொடியேநான்போவேன்
சுரங்கத்துக்குள்ளாக சுருக்காய்நடவுமென்றாள்
அப்படியேநல்லதென்று அர்ச்சுனனுந்தானெழுந்து
சுரங்கத்துக்குள்ளாக சுறுக்காய்நடந்தானே
கோட்டைகடந்தானே கொத்தளமுந்தான்கடந்தான்
பிள்ளையார்கோவிலண்டை போனானேவாள்விஜயன்

## ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனராசனை நினைத்துப் புலம்பல்.

அச்சுதானந்த ஐயர்புலம்புகிறார்
ஆருயிர்த்தோழனே அர்ச்சுனனேயென்னசெய்வேன்
உன்-அண்ணன் தருமருமே அனுப்பினாருன்பிறகே
இருவருமாகவே யிங்குவந்தோம்தீவுதனில்
உன்னையிழந்துநான் ஊர்வழியேபோவேனோ
மாதர்மேலாசையாய் மயக்கமெடுத்தீரே
அன்னவடிவாக ஆசைகொண்டுபோனிடத்தே
(அவளை) கூடியணையயிலே கொம்பனைமார்கண்டாரோ
பார்த்திபாவுந்தன் பதட்டமறிவேனே
(நீ) கட்டியணையயிலே காவலர்கள்கண்டாரோ
(அவளை) கூடியெழுந்திருக்கக் கோடிபேர்வந்தாரோ
(உன்னை) கட்டிப்பிடித்தாரோ காவலிலேவைத்தாரோ
வெட்டியெறிந்தாரோ வீரமணிவாளாலே
உத்தமவீரியனை உயிர்க்கழுவில்வைத்தாரோ
(நீ) மாண்டுமடிந்தாயோ வயிரமுடிசிந்திற்றோ
சந்தனவடிவழகர் தருமருக்கேதுசொல்வேன்
வெற்றிமதயானை வீமருக்கேதுசொல்வேன்

ஈரல்புகுந்த யிரட்டையர்க்கேது சொல்வேன்
தோராவடிவழகி துரோபதைக்கென்ன சொல்வேன்
மந்தாரக்குந்தியற்கு மாதருக்கென்ன சொல்வேன் (ன்
அவர் அங்கம்பிழையாதே ஆணழகாயென்ன சொல்வே
காணவும்போறேனோ காண்டீபங்கொண்டவனை
பாண்டிப்பெருமாளை பார்க்கவும்போறேனோ
என்று சொல்லிமாயவரும் யேங்கிப்புலம்பலுற்றார்
அந்தச்சமையத்திலே அங்குவந்தான் வாள்விசயன்
ஏன்காணுமச்சுதரே யேங்கிப்புலம்புகிறீர்
(என்) சமர்த்துகளும்சேவகமும் தாழ்வாகப்போறதில்
எந்தவிதத்திலும் ஈடழித்து நான்வருவேன் (லை
என்றதுகேட்டுமப்போ ஏதுசொல்வாரச்சுதருமே
என்னவடிவாக யிருந்தாயவளுடனே
அன்னவடிவாக அவளுடனேசேர்ந்தீரோ
ஆள்ரூபமாகி அவளுடனேசேர்ந்தீரோ
மனிதரூபமாகி மாதரைச்சேர்ந்தீரோ
என்னவடிவாக யிருந்தீரவளுடனே

அருச்சுனன் பவளக்கொடியாள் சேதியைச்சொல்லல்.

---

என்றதுகேட்டுமப்போ இளவிஜயனேதுசொல்வான்
அல்லகாணச்சுதரே ஆயர்பெருமாளே
அன்னவடிவாக இருந்தேனவளிடத்தில்
பவளக்கால் தூணடுவே பத்தினியாள்கட்டிவைத்தாள்
பஞ்சணைமெத்தையிலே பள்ளிகொண்டாள்பத்தினியும்
அர்த்தராத்திரிவேளையிலே நானெழுந்தேனச்சுதரே
அவள் நித்திரைசோதித்து நினைவறியவேணுமென்று
அன்னவூசல்தன்னை நான் அசைத்துவிட்டேனப்போது
அசைத்துவிட்டேனப்போது அவள்கையில்வாளுருவி
வீசினாளன்னேரம் வீரமணிவாளாலே
மூன்லாகையாகாமல் பின்லாகையாய்க்குதித்தேன்
மனிதரூபமானக்கால் வாள்முனைக்குத்தப்பார்கள்
தெய்வரூபமானக்கால் திரும்பிப்பிழைத்திடுவார்
வந்தவராரென்று வாய்மொழியுங்கேட்கலுற்றார்
(தான்) தேவாதிபெண்டமடி தேர்விஜயனருச்சுனண்டி
போரால்புகழ்பெற்ற பெருமாளவர்மைத்துனண்டி

மாயன்பெருமானுக்கு மைத்துனனும்நான்தாண்டி (கு
இவ்வார்த்தைநான்சொன்னேன் இளங்கொடிமாதருக்
பல்லொளிவைநான்காட்டிப்பார்த்துநகைத்துவிட்டே
கண்டுமயங்கிவிட்டாள் கட்டழகிகன்னியவள் (ன்
கோபித்துகண்சிவந்து தோகையிளங்கொடியாள்
கூடிமருவினேன் குங்குமச்சாலையிலே
மருவிப்பிரிந்தேனே மாதருறவானேன்
உம்மையழையுமென்று உத்தாரம்பண்ணிவிட்டாள்
(அவள்) மாளிகைக்குப்போக வாருங்காணச்சுதரே
அப்படியேயச்சுதரும் ஆணழகரிருவருமாய்
சல்லடந்தான்தொடுத்துத் தட்டிவரிந்துகட்டி
தட்டிமேலொட்டியாணம் சதுரமாய்வரிந்துகட்டி
முத்தினருமாலை முகமிலங்கக்கட்டினார்கள்
சட்டைதமானுகளும் தரித்தாரழகுபெற
பொன்முத்துப்பட்டாடை போர்த்தினார்பட்டாடை
அப்போதருச்சுனனும் ஆணழகனேதுசொல்வான்
அச்சுதானந்த ஐயரேயென்தோழா
சரப்பளியும்பொன்னும் தாளெடுத்துவாருமென்றான்
அப்படியேயச்சுதரும் அழகுமுட்டைதானெடுத்து
இருவருமாகவே யிசைந்துவழிநடந்தார்
சுரங்கத்துவழியாகத் துரிதமாய்ப்போய்ப்புகுந்தார்
பவளக்கொடியாள் பத்தினியாள்கோட்டையிலே
உள்வாசல்போய்நுழைந்தார் உத்தமவீரியர்கள்
அவள்-சிங்காதனத்துக்கு முன்பாகவந்துநின்றார்
வந்தவரைக்கண்டாளே மாதுஇளங்கொடியாள்
வாரும்வாருமென்று வணங்கினாள்மாதிவளும்
பத்தியுடன்புத்தியுடன் பாதஞ்சரணமென்றாள் (து
கொண்டுவந்தமுட்டையைக் கொற்றவர்கள்கீழேவைத்
கொம்பனைக்கெதிரில்வந்துகொற்றவர்கள்தானமர்ந்தா
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும் (ர்
வேல்பொருதுங்கண்ணாளும் வேந்தர்களைத்தான்பார்த்
உங்களிருவருக்கும் இதுவேதொழிலோவென்றாள் (து
எங்களிருவருக்கும் இதுவேதொழில்களென்றார்
முட்டையென்னவென்றுசொல்லிக்கேட்டாளிளங்கொ
அப்போ-அச்சுதானந்தஐயருமேதுசொல்வார் (டியாள்
அர்ச்சுனருமுன்னாலே அன்னவடிவெடுக்க

அவர்-ஆடலும்பாடலும் அதிசயத்தை நீபார்க்க
உன்-கொலுமுகச்சாவடியிற் கொண்டுவந்தேன்முன்பா
அன்னமென்றுசொல்லி ஆரணங்கே நான்பிடித்து (க
வேடனுமாக விலைகூறிவந்தேனே
என்னவிலையென்று இளங்கொடியே நீகேட்க
ஆயிரம்பொன்னென்று ஆரணங்கேசொன்னேனே
நீ-அன்னமொருதட்டும் பொன்னுமொருதட்டுமாக
பொற்கொடியே நீகொடுத்த பொன்முட்டையம்மாவிது
காண்டீபனர்ச்சுனரைக் கானகத்தில்கட்டிவைத்த
உன்-மார்பின்சரப்பளி மாதாவேயிந்தாவென்று
கருநீலப்பூங்குழலாள் கையிலேதான்கொடுத்தார்
அப்போதுபெண்மயிலும் அவள்கையில்தான்வாங்கி
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடியாளப்போது
மெத்தயிளப்பா யிருக்கிறீர்வேந்தர்களே
எங்கேயுண்டபோசனமோ யென்றாளிளங்கொடியும்
அப்போ-ஆயன்பெருமாளும் அரிராமர்தான்கேட்டு
அல்லியிடத்தில் அங்கேபொசித்ததுதான்
மூன்றுநாளாச்சுது மெல்லியரேநான்பொசித்து

பவளக்கொடியாள் ஸ்ரீகிருஷ்ணமூர்த்திக்கும்
அர்ச்சுனராசனுக்கும் விருந்திடல்.

---

இவ்வார்த்தைதான்கேட்டு இளங்கொடியாள்தானெழு
அவள்-ஆக்கபதமறியாள் அரிசிபதந்தானரியாள்(ந்து
அப்படிப்பட்ட ஆரணங்குமப்போது
பட்டாடைதான்வாங்கிப் பாவாடையுள்ளுடுத்தி
அடிசில்சமைக்க ஆரணங்குதானினைந்து
பாண்டத்தைக்கழுவி பனிநீருலைவார்த்து
சின்னசம்பாதன்னரிசி தீட்டியுலையிலிட்டாள்
முத்துப்போல்சாதம் வடித்தாளிளங்கொடியாள்
நந்தியெனும்பூசினிக்காய் நாலுவிதங்கறிசமைத்தாள்
வாழக்காய்பொரியலிட்டாள்வழுதலங்காய்தான்குழம்பு
பீர்க்கங்காய்பொரியலிட்டாள் புடலங்காய்தான்குழம்பு

கத்தரிக்காய்தான்பொரியல் கருணைபுளிக்குழம்பு
கொத்தவரைக்காய்கள் குலையோடேபொரியலிட்டாள்
பாவற்காய்பச்சடியும் பயிற்றங்காய்தான்பொரியல்
அத்திவிறகொடித்து தித்திக்கப்பால்காய்த்து
புத்துருக்குநல்லநெய்யாம் பொன்போல்பருப்புகளும்
அதிரசமுந்தேன்குழம்பும் அறுசுவைபதார்த்தங்களும்
பத்துவிதக்கறியும் பதினெட்டுபச்சடியும்
எட்டுவிதக்கறியும் இயலானபோசனமும்
ஆயிரத்தெட்டு அரிக்கறியும்பொறிக்கரியும்
கடுகசமையலிட்டாள் கன்னியிளமயிலும்
ஆச்சுதுபோசனங்கள் அமுதுண்ணவாங்களென்று
பாளையுமோலையும் பக்குவமாய்கைகொடுத்தாள்
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
தீர்த்தநீர்வாங்கி திருமுகமுஞ்சுத்திபண்ணி
வசந்தநீர்வாங்கி மதிமுகமுஞ்சுத்திபண்ணி
பூசைபண்ணுமண்டபத்தில் புண்ணியர்கள்வந்துநின்று
வாழையிலைபோலே வழித்திட்டார்வெண்ணீறு
கோவையிலைபோலே குழைத்திட்டார்திருநீறு
பூசைமுடிந்து புகழ்வேந்தர்வீரியரும்
போசனமண்டபத்தில் புண்ணியர்கள்வந்தமர்ந்தார்
வட்டமணைபோட்டாள் வந்தவர்களிருவருக்கும்
வட்டமணைமீது வந்தமர்ந்தாரிருவருமாய்
வாழையிலைபோட்டு வட்டித்தாள்சாதமது
சுத்திக்கறியைவைத்தாள் தோகையிளங்கொடியாள்
அள்ளிப்பருப்பையிட்டா ளதுகொண்டநெய்வார்த்தாள்
குளிர்ந்தசலம்வெந்நீரும் கொண்டுவந்துவைத்தாளே
கனிவர்க்கமுஞ்சிலது கச்சாயமும்சிலது
இத்தனையும்தான்படைத்தாள் ஏந்திழையாளப்போது
உண்ணுங்களென்று உபசரணைசெய்யலுற்றாள்
போசனங்களுண்டு புண்ணியருங்கையலம்பி
சிங்காதனத்திலே தேர்விசயன்வீற்றிருந்தான்
மாயன்பெருமாளும் வந்தாசனத்திருந்தார்
காச்சாக்களிப்பாக்கும் கம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிப்பாக்குகளும் மோரங்கிவெற்றிலையும்
அள்ளிக்கொடுத்தாளே ஆரணங்குஇருவருக்கும்

பவளக்கொடிமாது பத்தினியாளே துரைப்பாள்
அச்சுதானந்தரே அண்ணாவே நீர்கேளும்
சேராம்பூராசாக்கள் செய்தபெருந்தவத்தால்
பவளக்கொடிமேலே பத்தினியாள்பெண்பிறந்தேன்
பதினறுவருஷமாய் பட்டமரசாண்டேன்
கொள்ளவருவார்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவந்தவர்கள் வண்ணலட்சங்கோடியுண்டு
நான்-மாலைதரியாமல் மணமாலைசூட்டாமல்
நித்யகன்னியாகவே இருந்தேனின்னாள்வரைக்கும்
அர்ச்சுனர்தன்னாலே அழிந்துதேயென்தவங்கள்
பத்தினிதாபமது பாழாய்முடிந்துதே
எந்தன்விதிப்பயனை ஏதென்றெடுத்துரைப்பேன்
கதியைத்துலைக்கவல்லேன் காவேரிநீந்தவல்லேன்
என்-விதியைத்துலைக்குகைக்கு வெல்லவகையறியேன்
சேராம்பூராசருக்குத்தேன்மொழிநானென்னசொல்வே(ன்
இப்படியாக இளங்கொடியாள் தான்புலம்ப
அச்சுதானந்தரும் ஆரணங்கைத்தான்பார்த்து
என்னென்றுசொல்லி எடுத்துரைப்பார்மங்கையற்கு

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பவளக்கொடியாளுக்கு
கனவுசொல்லுதல்.

---

பவளக்கொடிமாதே பத்தினியேசொல்வதைக்கேள்
என்னைப்பிறப்பித்த ஈஸ்பரனுமீஸ்பரியும்
அக்கினியாற்றுக்கு அருகாகத்தான்வந்து
சூலமொருகையிலே கபாலமொருகையிலே
மானுமொருகையிலே மழுவுமொருகையிலே
விரித்தசடையும் வெண்புலித்தோலாசனமும்
பக்கங்கொலுவிருக்கும் பார்வதிநாயகமும்
கங்காபவானியருங் கவுரிதரித்தவரும்
திருக்கண்ணுடையவருந் திருநீறுதானணிந்து
வெள்ளைரிஷபமேறி வித்தகரும்வந்தார்காண்
நான்-கண்டுபயந்து கடுகசரணமிட்டேன்
பங்கயஞ்சீர்கண்ணாளே பவளக்கொடிமாதே
சேராம்பூராசாக்கள் செய்ததவத்தாலே

பவளக்கொடிமேலே பாலகியையுண்டுபண்ணேன்
பதினாறுபிராயமட்டும் பட்டந்தரித்தாளுமென்றேன்
மாலைதரியாமல் மணமாலைசூட்டாமல்
இருந்தீரேயாமானால் எரித்திடுவேன்பட்டணத்தை
பட்டணத்தை நீருக்கிப் பதியையெரித்திடுவேன்
மெய்யாகக்கண்டேன் விழித்தேன்கனவாச்சு
இப்படிக்கனவுகண்டே னென்று நீசொல்லுமென்றார்
அப்படிக்குச்சம்மதித்தாள் ஆரணங்குமப்போது (மாய்
போய்வாரோமென்றுசொன்னார் புண்ணியர்களிருவரு
அப்படியே நல்லதென்றாள் ஆரணங்குபவளக்கொடி
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனுமாயவரும்
சுரங்கத்துக்குள்ளாக துரிசாய்நடந்துவந்து
சுரங்கத்தைவிட்டு வடகோடிகானகத்தில்
பிள்ளையார்கோவிலண்டை போயிருந்தாருத்தமர்கள்
அப்படிக்குத்தானிருக்க ஆரணங்குமங்கையவள்
சப்ரகூடமஞ்சத்தில் தையல்நித்ரைசெய்தாளே
அந்தச்சமையத்தில் ஆரணங்குதாதியர்கள்
அருகேபுடைசூழும் அரிவையர்கள்வந்துநின்று
தட்டியெழுப்பினார்கள் தாமக்குழலாளை
அலண்டுயெழுந்திருந்தாள் ஆரணங்குமங்கையவள்
அவள்-மஞ்சத்தின்மேலிருந்த மல்லிகைபுஷ்பமெல்லா
காம்பழுகிநிற்க கண்டார்கள்தாதியர்கள் (ம்
ஒருநாளுங்கருகாத மல்லிகைபுஷ்பமெல்லாம்
காம்பழுகிநிற்பதென்ன காரணமோசொல்லுமென்றார்

## பவளக்கொடியாள் கண்டகனவை தாதிகளுக்குச் சொல்லுதல்.

---

பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிசொல்லுகிறாள்
மஞ்சத்தின்மேலேநான் மாதர்களே நித்ரைசெய்தேன்
அந்தநல்லவேளையிலே ஆதிசிவனிங்கேவந்து
என்னை-தட்டியெழுப்பினார் தாமக்குழலாளே
அலண்டுஎழுந்திருந்து ஆரென்றுநான்கேட்டேன்
உன்னைப்பிறப்பித்த உம்பர்பிரான்வந்தேனென்றார்
எங்கேவந்தீரென்று இளங்கொடியேநான்கேட்டேன்

அப்போ-ஐம்பதுபேராசாக்கள் ஐயமாரேதுசொல்வார்
பவளக்கொடிமாது பணிமாலேசூட்டுகிருள்
பட்டத்துராசாக்கள் பலபேருந்தானறிய
முரசறைந்துவாருமென்ருர் முடிமன்னர்மந்திரியும்
நல்லதெனஅப்படியே நடந்தானேசாம்புவனும்
வெள்ளானேமேலாக விருதுகளேக்கட்டினுன் (ன்
வெள்ளித்தமுக்கடித்தான் வெண்கலக் கொம்பெடுத்தா
ஆனேயேறிமாலேசூடி அடித்தான்பறையோசை
என்னசொல்லித்தானடிப்பான் இராசாக்கள்தான்கேட்
சேராம்புராசாக்கள் செய்ததவத்தாலே (க
பவளக்கொடிமேலே பிறந்தபதிவிரதை
பதினுறுவருஷமாய் பட்டமரசாண்டாள்
மணமாலேசூட்டுதற்கு மாதுநினேவானுள்
கொம்பனேயைக்கேட்டவர்கள் கோடானகோடியுண்டு
மாலேயிடவந்தவர்கள் வையகத்தில்கோடியுண்டு
மாதிதுநாள்வரைக்கும் மணமாலேசூட்டாமல்
நித்யகன்னியாகவே நீணிலத்தையாண்டிருந்தாள்
இப்போ-மணமாலேசூட்டுதற்கு மாதுநினேவானுள்
திங்கட்கிழமையிலே திகழ்புனர்பூசத்தில்
இருபதுநாழிகையில் எழில்மாலேசூட்டுகிருள்
மனதுள்ளராசாக்கள் வந்திடுங்கள்பந்தலுக்கு
மண்டலத்துராசாக்கள் வந்திடுங்கள்பந்தலுக்கு
அனேவோருமறியவென்று அடித்தான்பறையோசை
அடித்தபறையோசை அந்நகரந்தான்கேட்டு
மண்டலத்துராசாக்கள் மந்திரிகள்தான்கேட்டார்
திக்கிலுள்ளராசாக்கள் துரைகளெல்லாங்கேட்டார்கள்
பிள்ளேயார்கோயிலண்டை இருந்ததொருபோர்விசயன்
அடித்தபறையோசை ஆணழகன்கேட்டுவிட்டான்
சந்தோஷப்பட்டலவோ சரீரங்கள்பூரித்து
என்னவடிவாகப் போவோமவள்பந்தலுக்கு
ஆரைநினேக்கலுற்ருன் அளவற்றசிந்தையிலே
மாயன்பெருமாளே மனதிலேதானினேந்து
அடியளந்தமாயவனே ஐயாசரணமையா
காக்குங்குலதெய்வமே கரியமால்மைத்துனரே
வெண்ணேயுண்டசெவ்வாயா வெற்றிகொடுக்குந்தூயா
கண்ணுக்குள்நிமைபோல காக்கிறேனென்றுசொன்னீ
இதுவேளேயிதுசமையம் ஏழையைக்காருமையா (ர்

பவளக்கொடியாளை பணிமாலைசூட்டுதற்கு
மாலைவந்துமார்பில்விழ வரந்தாருமெந்தனுக்கு
மூக்காலேமுள்பொறிக்கி மூலைமரத்தில்கூண்டுகட்டி
காக்காயின்குஞ்சுபோல கடுகிவளர்த்தவரே
முட்டையின்குஞ்சுகளை முகமறியாப்பாலகரை
பிட்டுவளர்த்தீரே பிரபல்யங்காணவென்று
உந்தன்தயவாலே உயிர்கொண்டுலாவுகிறேன்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
மணமாலைசூட்டுதற்கு வடிவெனக்குத்தாருமென்றான்

## ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனராஜனுக்குக் கிழப்பிராமண வடிவங் கொடுத்தல்.

---

அந்தச்சமையத்தில் அருச்சுனராசதுரை
பிராமணரூபமது எடுத்தாரேபுண்ணியரும்
தொண்ணூறாம்பத்துஞ்சென்ற துவண்டகிழவனானார்
எற்பதும்பத்துஞ்சென்ற நரைத்தகிழவனானார்
தும்பைப்பூப்போலே துவண்டகிழவனானார்
நாணற்பூப்போலே நரைத்தகிழவனானார்
பண்ணைப்பூப்போலே பழுத்தகிழவனானார்
பரந்தமுகத்துடனே திரைந்தநரையானார்
குஷ்டரோகிப்பிராமணன்போல் கொற்றவரும் ரூபமானார்
வெள்ளரிப்பழம்போலே வெடித்ததுதேகமெல்லாம்
வெடித்தரணத்திலே புழுக்கள்நெளியுது
சீழுஞ்சலமுஞ் சிந்துதேதேகமெல்லாம்
ஒருகண்ணுபொட்டை ஒருகாலுநொண்டியானார்
ஓட்டைத்தவலையொன்று ஒடிந்ததெண்டாயுதமும்
செல்லெரித்தபுத்தகத்தை சேரவேகைகொடுத்தார்
பட்டயம்போலாக பாந்ததிருநாமமிட்டார்
அச்சுதானந்தரவர் அறியாதபிள்ளையானார்
பிராமணரூபமது எடுத்தாரேபுண்ணியரும்
பிள்ளையார்கோவிலண்டை இருந்தாரிருவருமாய்

## சேரம்புராசாக்கள் கலியாணஞ்செய்வதற்குப் பந்தலலங்கரித்தல்.

---

அந்தச்சமையத்தில் சேராம்பூராசாக்கள்
வாசலலங்கரிப்பார் மணமாலைசூட்டுதற்கு



ஸ்ரீகிருஷ்ணதேவர் அருச்சுனராஜனுக்கு கிழப்பிராமணவடிவங் கொடுத்தல்.

முத்தைப்பிளந்தார்கள் மூன்றுங்கால்நட்டார்கள்
பவளம்பிளந்தார்கள் பந்தக்கால்நட்டார்கள்
வெள்ளியால்கால்நிறுத்திவெற்றிலையால்பந்தலிட்டார்
கரும்பாலேகால்நிறுத்தி அரும்பாலேபந்தலிட்டார்
ஈர்க்குப்பிளந்தார்கள் இருகாதம்பந்தலிட்டார்
மூங்கில்பிளந்தார்கள் முக்காதம்பந்தலிட்டார்
நாணல்பிளந்தார்கள் நாற்காதம்பந்தலிட்டார்
வன்னிமரம்பிளந்து வாசலலங்கரித்தார்
மாவிலைத்தோரணமும் மருடநல்லதோரணமும்
அரசிலைத்தோரணமும் அலங்காரம்பண்ணுர்கள்
கண்ணடிசல்லிகட்டி கவரிமான்சுங்குவிட்டார்
பச்சைக்கிளிகளைப் பந்தலிலேதூக்கிவிட்டார்
வெட்டிவேர்குருவேரும் விதம்விதமாய்தூக்கினர்
பட்டாலலங்கரித்து பாளையாலொப்பமிட்டார் (டார்
கோத்தமுத்தைத்தூக்கி கொலுமுகத்தை தொங்கவிட்
மற்றமுத்தைப்பந்தலிலே மாணிக்கமாய் வைத்திழைத்
வாழைமரம்கமுகுமரம் வாசலெங்கும்கட்டினர்கள் (து
தென்னைபலாக்கனியும் தெருக்களெங்குங் கட்டினர்கள்
எங்கெங்குந்தோரணமும் எங்கெங்கு நதிருவிளக்கு
ஜன்னல்கள்தோறுஞ் சரங்கள்மிகக்கட்டினர்கள்
அத்தர்புனுகுகளை அள்ளித்தெளித்தார்கள்
சந்தனமுங்குங்குமமுஞ் சவ்வாதுந்தான்தெளித்தார்
நிலக்கோலமிட்டார்கள் நிலத்தின்மேல் பூத்தெளித்
பந்தலலங்கரித்து பட்டுரத்னப்பாய்போட்டார் (தார்
தங்கப்பாய்போட்டார்கள் சரிகைதலையணைகளிட்டார்
ஆயிரமணங்குபெற்ற ஆராட்சிமணியெடுத்து
கற்பகப்பந்தலிலே கட்டியேதூக்கினர்கள்
இருப்புநல்லசங்கிலியால் இயல்பெறவேகட்டினர்கள்
ஆராட்சிமணியை அடித்தார்களோசைபெற
ஆராட்சிமணிசத்தம் அந்நகரில்கேட்டிடுமாம்

## ஐம்பத்தாறுதேசத்து இராசாக்கள்வருதல்.

---

அடித்தபறையோசை அல்லவருங்கேள்வியுற்று
ஐம்பத்தாறுதேசத்து அரசர்களும்வாரார்கள்

ஓரணியாம்பச்சைவில்லு ஒன்றுநூராயிரமாம் (தம்
இரண்டணியாம்பச்சைவில்லு இரண்டாயிரஞ்சேனை ர
யானையேறுந்துரைகளெல்லா யானையேறிவந்தார்கள்
குதிரைஏறுந்துரைகளெல்லா குதிரைஏறிவந்தார்கள்
ஒட்டையேறுந்துரைகளெல்லாம் ஒருகோடிவாரார்கள்
கண்டவிடங்களெல்லாம் கருமலைபோல்யானைகளாம்
பார்த்தவிடங்களெல்லாம் பருவதம்போல்தேரணிகள்
கண்கொள்ளாகடுஞ்சேனை மண்கொள்ளா மகாதளங்க
ஏகமாய்த்திரண்டு யெல்லோரும்வாரார்கள் (ள்
பூமியதிருதங்கே பூலோகம்நெக்கிடவே
வாரார்கள்ராசாக்கள் மகமேருகுலுங்கிடவே
பிள்ளையார்கோவில் ஓரமாய்வாரார்கள்
காளையவருச்சுனனர் கண்டானே துரைகள்தன்னை
அச்சுதானந்த ரையரே நீர்கேளும்
இத்தண்டராசாக்கள் இச்சையுடன்வாரார்கள்
பவளக்கொடியாளை பணிமாலைசூட்டுதற்கு
அனந்தங்கோடிராசாக்கள் ஆசையுடன்வாரார்கள்
மாயன்தயவாலேநான் மணமாலைசூட்டினல்
இத்தண்டராஜாக்கள் இஞ்சிதின்றகுரங்காவார்
ஏக்கத்துப்போவாரே இருந்தவிடஞ்சொல்லாதே
என்றுநகைத்தவரும் எல்லோருடன்நடந்தார்
பார்ப்பான்வருகிறதைப் பார்த்தாதுரைகளெல்லாம
ஈழக்கிழவனிவன் ஏதுக்குவாரான்காண்
தோலும்நரம்புகளும் தொங்குதுகிழவனுக்கு
அங்கம்சதைகளெல்லாம் ஆடுதுகிழவனுக்கு
இந்தக்கிழவன் ஏதுக்குவாரான்காண்
என்றுசிரித்தார்கள் இயலானராசாக்கள்
கோவிந்தாவென்று கொற்றவனுங்கீழ்விழுந்தான்
தள்ளாடித்தடியூன்றித் தான்வருவான்மெள்ளமெள்ள
கொக்கென்றிரும்புவான் கோழைவந்துமாரடைக்க
வப்புவாய்கொட்டிவர வாள்நீருசொள்ளொழுக
கண்ணிரண்டுங்கீரைவிரை காதிரண்டுங்கேளாது
தூக்கியடிவைப்பாராஞ் சுழன்றுவிழுவாராம்
எடுத்துஅடிவைப்பாராம் இடறிவிழுவாராம்
அறுகம்புல்தட்டினல் அறுபதிடம்விழுவார்
மூங்கில்வேர்தட்டினல் முப்பதிடம்விழுவார்

இப்படியாக இருக்கின்றவேளையிலே
இவனைக்-காணுதேயல்லவோ கலங்கிருள்பவளகன்னி
நெடுநாள்தவமிருந்து நித்திரையும்வாராமல்
கண்கெட்டபாப்பானைக் கலியாணம்பண்ணவென்று
மாலையிடத்தேடியே மயங்குகிருள்மங்கையரும்
காணுதேதேடியல்லோ கலங்குருளென்றுசொல்லி
இவனை-பரியாசம்பண்ணியேபலபேரும்போய்நடந்தார்
சேராம்பூராசாக்கள் துரைகளிடபந்தலிலே
வாகனங்கள்விட்டிறங்கி வந்தமர்ந்தார்மன்னர்களும்
மணக்கோலப்பந்தலிலே மன்னவரும்வந்தமர்ந்தார்
ஆரியகிழவனும் அர்ச்சுனனும்வந்தமர்ந்தார்

பவளக்கொடியாளை ஸ்நாநஞ்செய்வித்து
ஆபரணங்களை அலங்கரித்தல்.

---

பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியாளை
ஆயிரந்தாதிமார் ஆரணங்குமோடிவந்து
சலவைக்கல்மண்டபத்தில் தையலருமோடிவந்து
பூத்திண்ணைமண்டபத்தில் பொற்கொடியைகூட்டிவந்தார்
தண்டையசைய சதங்கைதகுதிகென்ன
கொண்டையசைய குயில்வந்துகூத்தாட
வட்டமணைமேலே மாதரையிருக்கவைத்து
நல்லெண்ணெய்கொண்டுவந்து நலங்கிட்டார்பந்தலுக்குள்
சம்பங்கியெண்ணெய்கொண்டு தடவிநலங்கிட்டார்கள்
குங்குமப்பூஎண்ணெகொண்டு கூந்தல்தனக்கிட்டார்கள்
முந்நூறுசுமங்கலிகள் மூன்றுநலங்கிட்டார்கள்
ஐந்நூறுசுமங்கலிகள் ஐந்துநலங்கிட்டார்கள்
மங்களம்பாடியே மாதர்நலங்கிட்டார்கள்
சோபனங்கள்பாடியே தோழியர்நலங்குமிட்டார்
ஆலாத்திசுற்றியே அபிஷேகமாடலுற்ருர்
மஞ்சனச்சாலையிலே மஞ்சனீராட்டிவைத்தார்
ஒட்டுமஞ்சள்பூசியே ஒளிபவளநீராட்டி
ஸ்நானங்கள்பண்ணியே தாமக்கருங்குழலாள்
நீர்காட்டிவூதியே நெருப்பில்தலைசாய்த்து
ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்ததுயில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி

மச்சுரதமேறி வாராளாம்மா துகன்னி!
அங்கிருந்தராஜாக்கள் அனைவோரும்பார்த்துரைப்பார்
ஒருவர்க்கொருவர் உகந்துகந்துபேசுகிறார்
நீறுபூத்ததோர்நெருப்பை ஊதிபார்த்தநிறம்போல
ஆயிரமின்னலிலே சோதிமின்னல்மின்னுப்போல்
தங்கத்தைக்காய்ச்சியே தரையிலேவிட்டாற்போல்
ஈயத்தைக்காய்ச்சியே யிலையிலேவிட்டாற்போல்
பொன்னையுருக்கி பூமியிலேவிட்டாற்போல்
சந்திரனைப்போலாக தளும்புகிறாள்தையலரும்
சூரியனைப்போலாக துலங்குகிறாள்தோகையரும்
யார்க்கிவள்கிட்டுவளோ அண்ணமாரே நாமறியோம்
எவர்க்குக்கிடைக்குமோ இந்தநல்லபாக்கியங்கள்
தாங்களேசொல்லியே தலையெடுத்துப்பார்த்திருந்தார்
ஆனந்தவாழ்மாரி அவளுடையதேர்வருது
பார்மன்னன்சபைநடுவே பவளக்கொடிதேர்வருது
அரசர்சபைநடுவே ஆரணங்குதேர்நிறுத்தி
எண்ணுதுமெண்ணுகிறாள் ஏலப்பசுங்கிளியாள்
ஆணலழகுமன்னன் அர்ச்சுனராசாவை (லை
வடிவோடேவாருமென்று மன்னவனைச் சொன்னதில்
என்னவடிவாக யிருக்கிறாரோவென்றறியேன்
இவளைப்போல்மங்கை எங்குங்கிடையாதோ
நாட்டில்அமையாதோ நாயகியாள்தன்போலே
என்றுமனதில் இசைந்துவழிபோனாரோ
தருமாபுரிக்கலவோ தானடந்துபோனாரோ
என்செய்வேன்ஈஸ்பரனே யேதுமறியேனே
கிழக்குமுகம்நோக்கிக் கிளிமொழியாள்பார்த்தாளே
பக்கத்தில்நின்றதொரு பாங்கியவளேதுசொல்வாள்
முத்துமுடிதரித்த முடிமன்னராசாக்கள்
பவளமுடிதரித்த பாராளும்ராசாக்கள்
அங்கவங்கலிங்கம் அவதிந்தியரசரம்மா
செல்வமாய்ப்பெண்பிறந்து சீரழியநாளாச்சோ
அருமையாய்ப்பெண்பிறந்து அம்பலமானீரோ
சிங்களங்கொங்கணம் தெங்கணராசரம்மா
மாளவம்சாலவம் மகதமச்சராசரம்மா
இப்படிக்குத்தாதிசொல்ல யிளங்கொடியாள்தான்கேட்
தெற்குமுகமாகத் திரும்பினாள்ராசாத்தி (டு

பக்கமிருந்தவொரு பாங்கியவளேது சொல்வாள்
வச்சிரமுடிதரித்த மந்திரிகள்ராசரம்மா
அருணங்கிராடம் யவனங்குருசவ்வீரம்
குருகுகொல்லம்சூரசேனம் கோசலஞ்சிந்துசீனம்
மண்டலத்தையாளுகின்ற மகாராசராசரம்மா
மாலைசுழற்றியே மன்னர்மேல்போடுமென்றார்
மேற்குமுகமாக மெல்லிதிரும்பிப்பார்த்தாள்
பக்கத்திலிருக்கின்ற பாங்கியவளேது சொல்வாள்
பலலவம்பாஞ்சாலம் பப்பரங்காந்தாரம்
தேசத்தையாளுகிற தீரரிவர்களம்மா
மாலையைச்சுழற்றியே மன்னவர்மேல்போடுமம்மா
வடக்குமுகமாகத் திரும்பினாள்மாதுகன்னி
பக்கத்திருந்தவொரு பாங்கியவளேது சொல்வாள்
துஷ்டர்தனையடக்குந் துரைகளிவர்களம்மா
வடதேசராசாக்கள் மன்னரிவர்களம்மா
எந்திழையேஉன்னழகுக் கேற்றபுருஷரம்மா
உன் மனதுக்கிசைந்த மணவாளன்தானிருப்பான்
மாலைசுழட்டுமென்றார் மாதரிளங்கொடியை

பவளக்கொடியாள் அர்ச்சுனனை மாலைதரித்தல்.

---

பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடியாளும்
அப்போ-ஆரை நினைத்தாளோ அளவற்றசிந்தையிலே
எவரை நினைத்தாளோ எண்ணமற்றசிந்தையிலே
ஆகாயவாணிதுர்க்கை யம்மன்பிடாரிகளே
மஞ்சளழகிகளே மடிச்சேலைகாரிகளே
பொங்கநயினாரே பொற்கொடியாண்டவனே
இல்லறத்துதேவதைகள் எல்லோருந்துணையிருங்கள்
ஆலைவாய்ச்சொக்கரே அங்கயற்கண்மீனாட்சி
மதுரைமீனாட்சியம்மாள் வந்துதுணையிருங்கள்
என்னைப்பிறப்பித்த யீஸ்பரரேதுணையிருங்கள்
மாயன்பெருமாள் மங்கைநல்லாள்லட்சுமியே
ஆயன்பெருமாளென் னருகேதுணையிருங்கள்
முப்பந்துமுக்கோடி முனிவரெல்லாங்காத்திருங்கள்
வசிஷ்டருந்துரியும் மணிமாலைகாத்திருங்கள்
தான்-ஆகாயம்விட்டமாலை அருச்சுனனார்தன்கழுத்தில்
சுழற்றிவிட்டமாலையது சுரேந்திரன்மகன்கழுத்தில்

அருச்சுனனார் தன்கழுத்தில் அழகுமாலை விழவேணும்
என்னவடிவாக இருக்கிறாரோ நானறியேன்
சுவாமியைத்தானினைந்து சுழற்றினாள்மாலைதன்னை
விரலால்சுழற்றியே வீசினாள்மாலைதன்னை
சுழற்றிவிட்டமாலையது சுரர்கள்லோகம்போகுறது
சூரியமண்டலத்தை சுத்தியுலாவுகுது
எதிர்ப்பட்டதேவர்களெல்லவரைப்பார்த்துவரும்
நாலுபக்கஞ்சூழ்ந்துவரும் ராசர்களைச்சுற்றிவரும்
தேடியேபார்க்குதே தேர்விஜையனர்ச்சுனரை
ஆரியனைப்போலாக இருந்ததோரர்ச்சுனர்மேல்
வாள்விஜயன்தோள்மேலே வந்துவிழுந்தது
வேதியன்தன்கழுத்தில் விழுந்ததுபூமாலை
தேவதுந்துமிமுழங்க தேவர்பூமாரிபெய்ய
ஆகாயபேரிகைதான் அடிபடுதுதிமிதிமென்று
பூவருஷந்தான்பொழிந்தார் பொன்னுலகதேவரெல்லாம்
ஆராட்சிமணிகளும் அடித்ததுஓசையுடன்
சேராம்பூராசாக்கள் தீரர்களும்பார்த்துவிட்டார்
அத்தண்டராஜாக்கள் மந்திரிகள்வந்திருக்க
விருத்தனுடதோள்மேலே விழுந்ததென்ன பாவமிது
வேதியன்கழுத்திலே விழுந்ததென்னபாவமிது
ஆரியனைமாலையிடப் பிறந்தாளோஆரணங்கு
வேதியற்குமாலையிட விதித்துதோயென்மகளே
செல்வமாய்ப்பெண்பிறந்து சீரழியநாளாச்சோ
அருமையாய்ப்பெண்பிறந்து அம்பலமானீரோ
பிச்சையிரந்துண்ணும் பிராமணற்குப்பெண்டாகி
கல்லெடுப்பரிசிக்கு காத்திருக்கநாளாச்சே
பாத்தாளியரிசிக்கு பார்த்திருக்கநாளாச்சோ
இந்தக்கிழவனுக்கோஇதுக்கோநான்பெண்வளர்த்தேன்
குருட்டுக்கிழவனுக்கோ கோடிநாள்தபசுபண்ணேன்
நொண்டிக்கிழவனுக்கோ நோக்கித்தபசுபண்ணேன்
சண்டிக்கிழவனுக்கோ தனிமாலைசூட்டிவிட்டாள்
இந்தக்கிழவனுக்கு எவர்தான்வழிவிட்டார்கள்
பாவிகிழவனிவன் பந்தலுக்குள்ஏன்வந்தான்
ஆர்காண்பிராமணரே அழகுமாலைதாருமென்றார்
பெண்ணரசுதான்போட்ட பூமாலைதாருமென்றார்
அப்போதுவாள்விஜயன் ஆரியனுமேதுசொல்வான்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாட்கு

மாலைதரிக்கிறூர் மன்னவர்களென்றுசொல்லி
பிச்சைக்குவந்திடத்தில் பூமாலைபோட்டுவிட்டாள்
வேணுமென்றுவந்தேனே மெல்லியரைமாலையிட
பிச்சைக்குவந்திடத்தில் பெரும்பாம்புசுற்றியது
இவளைநான்பெண்டுவைத்து என்னசெய்யப்போறேனை
தள்ளாதகிழவனுக்குத் தையலருமேன்காணும் (ப்பா
மாளுங்கிழவனுக்கு மாதர்களேன்காணும்
எனக்கிட்டமாலைதனை எடுத்துத்தரித்துகொள்ளும்
மாலைதரித்துக்கொண்டு மங்கிலியம்சூட்டுகிறோம்
உங்களுக்குப்பெண்டிருக்க உலகத்திலுற்றபடி
வளர்த்துஎடுத்தீர்கள் மாலைதரித்திடுங்கள்
இந்தாருமாலையென்று ஈய்ந்தார்பிராமணரும்
அந்தச்சமையத்தில் ஆரணங்குதான்கேட்டு
பங்கயஞ்சிர்கண்ணாள் பவளக்கொடியோடிவந்து
என்னையும்பெற்றெடுத்த இயலானஐயாவே
மாளாக்கிழவனுடன் வார்த்தைகளேனுங்களுக்கு
என்தலைவிதிப்பயனை எவருமறியார்கள்
ஆதிசிவன்தன்னெழுத்தை ஆருமறியார்கள்
எல்லார்தலையிலும் ஈரெழுத்துஒரெழுத்து
பாவிதலையிலந்தப் பார்ப்பானைஎழுதிவைத்தான்
கதியைத்துலைக்கவல்லேன் காவேரியை நீந்தவல்லேன்
என்-விதியைத்துலைக்குகைக்கு வெல்லவகையறியேன்
அன்றெழுதும்ஆதிசிவன் அழித்தெழுதப் போறதில்
தலையிலெழுதினதை தள்ளிவைக்கப்போறதில்லை (லை
தலையிலெழுதினது தவறுதொருக்காலும்
ஒருவனுக்குமாலையிட்டு உலகத்தார்வாழ்வார்கள்
இருவருக்கும்பெண்டாக இருப்பேனோஎன்தகப்பா
வாருமையாவென்று வலதுகையைத்தான்பிடித்து
மாணிக்கவாசலிலே மறையவனைக்கொண்டுசென்றாள்
அந்தச்சமையத்தில் ஆயன்பெருமாளும்
செந்தும்பிபோலே ஸ்ரீராமர்வடிவெடுத்தார் (யில்
ஜிவ்வென்றுதான்பறந்து தேன்மொழியாள் தன்செவி
வந்துநுழைந்தார் மயிலனையாள்தன்செவியில்
அஞ்சாதேஅஞ்சாதே அருந்தங்கையஞ்சாதே
ஆணழகுமன்னன் அர்ச்சுனராசன்காண்

என்றுவுரைத்தார் இளங்கொடியாள்தன்செவியில்
அருஞ்செவியில்தானுரைத்து ஆயரும்போய்நடந்தார்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளும்
வேடத்தைமாற்றி விஜயர்வடிவெடென்றாள்
அர்ச்சுனர்வடிவுகளை அழகாகக்காட்டுமென்றாள்

அர்ச்சுனராஜன் கிழப்பிராமணன் வடிவைவிட்டுத்
தன்சுயரூப மெடுத்தல்.

---

சேராம்புராசாக்கள் சிந்தைகுளிர்ந்துவிட
கண்டோர்பயந்துவிட கால்கைகள்தடுமாற
சிந்தைகுளிர்ந்துவிட தேர்விஜயன்வடிவெடுத்தான்
அங்கங்குளிர்ந்துவிட அர்ச்சுனன்வடிவெடுத்தான்
முன்னழகும்பின்னழகும் முதுகிலேமட்சரேகை
பலலிலேபரசவீணை பாதத்திற்செநதாமரை
நாவிலேநட்சத்திரம் நயனவிழிசோதிவிட
மாயன்தயவாலே வாள்விஜயன்ரூபமானான்
ஆயன்தயவாலே அருச்சுனரூபமானான்
கண்டவர்கள்தான்மயங்க காண்டீபன்வடிவெடுத்தான்
பார்த்தவர்கள்தான்மயங்கப்பார்த்திபன்வடிவெடுத்தார்
ஐந்துபிராயம் அறியாப்பிராயமென்றும்
அச்சுதானந்த ரையரும்வந்துவிட்டார்
பவளக்கொடிமாது பார்த்துமகிழ்ந்துவிட்டாள்
சேராம்புராசாக்கள் தேர்விஜயன்தன்னைக்கண்டு
கண்டுமகிழ்ந்தார்கள் காண்டீபனர்ச்சுனரை
பார்த்துமகிழ்ந்தார்கள் பார்த்தீபன்அர்ச்சுனரை
விஜயனழகுகண்டு மெத்தமனமகிழ்ந்தார்
எங்கள்-மகள்தனக்கேத்ததொரு மணவாளன்வந்தீரே
அர்ச்சுனரைப்போலாக வாராமல்ஆணழகா
பிராமணவடிவாகப் பெண்கொள்ளவந்தீரே (மோ
வந்தென்னைப் பெண்கேட்டால் தந்திடோமென்றே
ஈளக்கிழவனைப்போல் என்காண்வடிவெடுத்தீர்
என்றுமனமகிழ்ந்தார் இயலானராசாக்கள்
அந்தச்சமையத்தில் அங்குவந்ததுரைகளெல்லாம்
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடிமாது
ஆரியனைமாலையிட்டு அழைத்தேகக்கண்டவர்கள்

இஞ்சிதின்றகுரங்கதுபோல் ஏக்கற்றார்மன்னவர்கள்
விருத்தகிழவனுக்கு வேதியற்குவாய்த்ததென்று
இங்கிருந்தென்னபலன் என்றெண்ணிராசாக்கள்
அவரவர்கள்மாளிகைக்கு அனைவோரும்போகலுற்றார்
சேராம்பூராசாக்கள் தீரரவரேதுசெய்தார்
வில்விஜயனருச்சுனனை வேந்தர்வரவழைத்து
நல்லவேளைதப்பாமல் ராகுகாலம்வாராமல்
வாச்சியங்கள்தியாச்சியங்கள் வாராதவேளைகண்டு
சேஷைமணைபோட்டு சீரானபந்தலிலே
செந்நெல்லரிசிகொண்டு தினகரற்குப்பொங்கலிட்டு
மாப்பிள்ளையும்பெண்ணையும் மணைமேலிருக்கவைத்து
மூந்நூறுசுமங்கலிகள் முகந்துமுளைதெளிக்க
ஐந்நூறுசுமங்கலிகள் அள்ளிமுளைதெளிக்க
சாலுங்கரகமும் சந்திரற்குமுன்பாக
அம்மிவலமாக அராசாணிமுன்பாக
வேதப்பிராமணர்கள் வேதங்களோதிவர
ஓமப்புகையெரிய உடனுகவேதஞ்சொல்ல
காப்பரிசிதான்வழங்கி கங்கணமுங்கட்டினார்
சேராம்பூராசாக்கள் தீரரெழுந்திருந்து
மாவுங்கனிநூலும் மஞ்சளொடுநெல்விதையும்
தாலியுங்கூறையுந் தான்கொண்டுவந்தார்கள்
குருகுலத்துராசாவே குந்திமகனரே
மந்தாரக்குந்தியரும் பெற்றமகனரே
பங்கயஞ்சீர்கண்ணாள் பவளக்கொடியாளை
தந்தேனுனக்கீந்தேன் தாரைநீர்பிடியுமென்றார்
காலுக்குமிஞ்சியிட்டார் கைக்குக்கணையாழியிட்டார்
தையலரைத்தான்கொடுத்துத் தாரைநீர்வார்த்தார்கள்
ஏந்திழையைத்தான்கொடுத்து இஷ்டநீர்வார்த்தவரும்
தாலிதரித்துமணமாலை சூட்டுமென்றார்
அப்போதருச்சுனனும் ஆயனைத்தானினைந்து
தாலியைக்கட்டினன் தார்விசயனர்ச்சுனனும்
பிரமமுடிமூன்றுமுடி போட்டானேவாள்விசையன்
காப்பரிசிதான்வழங்கி கங்கணமுந்தானவிழ்த்தார்
அம்மிமிதித்து அரசாணிசுற்றிவந்து
பெரியோர்களெல்லோரும் பெருக்கமனமகிழ்ந்து
மன்னவனுந்தேவியுமாய் மாளிகையினுட்புகுந்தார்

தங்கரத்னமேடையிலே தனஞ்சயனும்வீற்றிருந்தான்
ஐம்பதுபேரரையமாரும் அவர்களுடதேவிமாரும்
பொங்கிமனங்குளிர்ந்து பொற்கொடிமாதரெல்லாம்
தனஞ்சயற்கும்வேதியற்கும் சரமாகச்சேஷையிட்டு
பாலும்பழமும் பரிவுடனேதான்கொடுத்தார்
பாலமுதமுண்டு பசியாறித்தாளிருந்தார்
அப்பால்-வந்தமனிதருக்கும் மகாபெரியசேனைகட்கும்
அத்தரும்பன்னீரும் அழகாகத்தான்தெளித்து
சந்தனமுங்கெந்தபொடி தாம்பூலந்தான்வழங்கி
பாலித்தார்புட்பம் பரிமளங்கள்தன்னுடனே
கோடிவெகுபூரிதானங் கொடுத்தார்பெரியோர்க்கு
தட்சணையுந்தாம்பூலந் தார்வேந்தர்தான்கொடுத்தார்
வந்தமனிதர் மகாசேனையெல்லவர்க்கும்
கைக்குச்சலங்கொடுத்தார் கட்டழகரெல்லவர்க்கும்
பந்தியமர்த்தி பரிமாறிபோசனங்கள்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்பருப்புகளும்
பத்துவகைபச்சடியும் பறிமாறியாவருக்கும்
புத்துருக்குநெய்யதனை போதமிகப்படைத்து
முப்பழமுஞ்சர்க்கரையும் அப்பளமுந்தான்படைத்து
ஆயாசந்தீரவே பாயாசந்தான்கொடுத்தார்
போசனங்களுண்டு புகழ்வேந்தர்யாவர்களும்
கைகாலலம்பி கனமிகுத்தமன்னரெல்லாம்
வேடிக்கையாக வீற்றிருந்தார்பந்தலிலே
அப்போ-வெட்டியபாக்கும் மிகமணக்கும்வெற்றிலையும்
சொர்னபுட்பமாலைகளும் சோடிசகலாதுகளும்
வைத்துக்கொடுத்தார்கள் வரிசைவெகுமானம்
ஒட்டைகுதிரைகள் உத்தமர்கள்மொய்யெழுதி
உத்தமர்களெல்லோரும் உள்ளங்களிகூர்ந்து
காண்டீபனருச்சுனனும் கன்னியவள்தேவியுமாய்
ஊர்வலமானபின்பு உத்தமனுந்தேவியுமாய்
பள்ளியறைமண்டபத்தில் பாங்குடனேபோகலுற்றார்
வந்திருந்தராசாக்கள் மன்னவர்களெல்லோரும்
அவரவர்கள்ராச்சியத்தை ஆளுகைக்குப்போனார்கள்
வாள்விசயன்கோமானும் மருவுண்டுதானிருந்தான்
பதினொருநாளாச்சு பார்த்தவன்வந்துமாலையிட்டு
இப்படியாக இருக்கின்றவேளையிலே
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசெய்தாள்

மருடத்துரைச்சியரும் வாள்வரசியல்லியரும்
கொச்சிதுரைச்சி கொடிமதுரையல்லியரும்
மச்சுதுரைச்சி வடமதுரையல்லியரும்
காலையில்தானெழுந்து கனிவாயைசுத்திபண்ணி
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
பொய்கைதனிலிறங்கி பொற்கொடியும்ஸ்நானஞ்செய்து
ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைந்துதுயில்களைந்து நாகரீகப்பட்டுடுத்தி
சொக்கருளென்று திருநீற்றுக்காப்புமிட்டு
மதுரைமீனாட்சியரை மாதாவைநினைந்து
அரன்பூசையரிபூசை அனுஷ்டானம்பண்ணியவள்
இங்கிதமானதொரு அலங்காரப்பண்ணலுற்றாள்
சல்லடந்தான்தொடுத்து தட்டிபிருவெடுத்தாள்
தட்டியின்மேலொட்டியாணம் சாதாவரிந்துகட்டி
சல்லடத்தின்மேலேயவள் தாமரைப்பூச்சுங்குவிட்டாள்
வலப்புறத்துச்சுங்கிலே மாகாளியட்சரமும்
தென்புறத்துச்சுங்கிலே தெய்வகன்னியட்சரமும்
முத்துக்கபாயணிந்து முதுகெல்லாமங்கிபோட்டாள்
வச்சிரக்கபாயணிந்தாள் மார்நிறைந்தஅங்கிபோட்டா(ள்
அங்கிகபாயணிந்தாள் அல்லிமலர்நாயகமும்
கேடயமும்பல்லயமும் கிளிமொழியாள்தான்தரித்தாள்
மந்திரவாளெடுத்து வலதுகையில்தான்பிடித்தாள்
பதினெட்டுஆயுதமும் பத்தினியாள்தான்தரித்தாள்
முத்துமிதியடியை தொட்டுநடந்துவந்து
வசந்தமணிமண்டபத்தில் மாதவளும்வந்தமர்ந்தாள்
கொலுக்கூடமண்டபத்தில் கொம்பனையும்வந்தமர்ந்தா(ள்
மந்திரிபவளசேனை மயிலணையும்வந்தமர்ந்தாள்
தாதிகளுந்தோழிகளுந் தையலரைச்சூழ்ந்தார்கள்
செங்கமலத்தாதி சேனாதிபவளசேனை
வெண்சாமரைக்கவரி வீசியவள்பக்கம்நின்றாள்
ஆலவட்டஞ்சாமரைகள் அருங்கிளிமார்வீசிவர
மல்லிகைவிசிறிகளும் மயில்விசிரிதான்வீச
செண்டாடிப்பந்தாடித் தேன்மொழிமார்சுழன்றுவர
ஆடுவார்பாடுவார் அல்லவருஞ்சூழ்ந்தார்கள்
பந்தாடிச்செண்டாடிப் பாங்கிமார்சூழ்ந்துவர
கேளிக்கைபார்த்து இருக்கிறாள்கிளிமொழியாள்

சங்கீதம்பார்த்து இருக்கிருள்கிளிமொழியாள்
முத்துவித்தவர்த்தகரும் மூவிருகணக்கர்களும்
கணக்குச்சுருளெடுத்து கடுகவேவாருர்கள்
கொம்பனையாள்முன்னேவந்து கும்பிட்டுதெண்டனிட்(டார்
கைகட்டிநின்ருர்கனை கட்டழகரெல்லவரும்
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியேதுசொல்வாள்
முத்துகொழித்ததுவும் வித்தகணக்குகளும்
அன்ருடங்கணக்குகளென் அம்பலத்தேவாராமல்
எட்டுநாள்வாராமல் இருந்தவயணமென்ன
ஒருமுத்துகுறைந்தாலே உயிர்க்கழுவில்போட்டிடுவேன்
இருமுத்துகுறைந்தாலே யீரல்பிளந்திடுவேன்
எட்டுநாள்கணக்குகளும் எழுதிமுடியுமென்ருள்
கண்கள்பொறிபறக்கக் காந்தாளப்பட்டாளே
செந்தலைநாகம்போல் சீறியெறிமறந்தாள்
கண்ணுல்பொறிபறக்க காதாலனல்வீச
வாயால்பொறிபறக்க வலதுகண்ணனல்வீச
ஈச்சம்பழம்போலே இருகண்ணுந்தான்சிவக்க
கோவைப்பழம்போலே கொள்ளிகொண்டுவீசுதுபார்
கண்டசதைகளைக் கடித்துமிழ்ந்தாளல்லியரும்
கணக்கரதிகாரி கைகால்நடுங்கிவிட்டார்
எட்டுநாள்கணக்குகளும் எழுதிமுடிக்கலுற்ருர்
கண்ணுக்குமேல்கண்ணய் இருக்கிருள்கன்னியரும்
ஆருலுங்கூடியே ஆற்றவொண்ணுக்கோபமிப்போ
அந்தச்சமயத்தில் அங்குவாரான்புலந்திரனும்
வீதிவிலாசமது விளையாடிவில்வேந்தன்
தங்கத்தேரோட்டியே தனஞ்சயன்புத்திரனுந்
செம்பொன்தேரோட்டியே சித்திரவீதியெல்லாம்
முத்தின்தேரோட்டியே முடிமன்னர்வீதியெல்லாம்
மாணிக்கத்தேரோட்டி மதுரைத்தெருவீதியெல்லாம்
தண்டையசையவே சதங்கைதகுதிகென்ன
அரைவடமுங்கிண்கிணியும் அசைந்துநிழல்காட்ட
கணையாழிசோரவிட கண்டசரங்கள்மின்ன
வட்டமிட்டநெற்றியிலே வயிரசுட்டிநின்றிலங்க
சருவாபரணங்களும் தாவடமும்தானசைய
சிங்காரமிதியடியும் சிங்காணிவில்லுகளும்
பக்கமிருபுரமும் பட்டாசுழற்றிவர

கத்திகட்டுமன்னரெல்லாங் கைகட்டியோடிவர
ஈட்டிபிடிமன்னரெல்லாம் இருபுறமுஞ்சூழ்ந்துவர
பொற்பரிசுமேலாகப்பிள்ளைவருகுதுபார்
வெகுசனங்கள்நெருங்கி வருமிடங்கொள்ளாமல்
அருகேநெருங்கிவந்து அருமகனைக்கண்டுவிட்டாள்
அப்பாவருக ஆணழகாபுத்திரனே
வருகவருகவென வாழ்கவேவருகவென்ருள்
திருவருகபூவருக தேனேவருகவென்ருள்
கண்ணேமணியே கருவிளமே நீவருக
கண்மூன்றுடைய கைலாசநாதரென்னும்
சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
வைகைக்கரைதனக்கு மண்சுமந்தசொக்கருட
கப்பலுஞ்சோங்குங் கரைதுரையுமுள்ளவனே
சங்கின்றமுத்துச் சலாபமுடையவனே
அப்பாவருகவென்று ஆவலுடன்முத்தமிட்டாள்
வாரியெடுத்தவளும் மதிமுகத்தில்முத்தமிட்டாள்
மைந்தனைப்புல்கி மடிமேலேவைத்திருந்தாள்
போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறுவான்
போதும்போதுமென்னுச்சி பிள்ளையைக்கொஞ்சினது
மைந்தனைக்கொஞ்சினது போதுமம்மாமாதாவே
தங்கத்தேர்தந்தாரே தனஞ்செயனுரென்பாட்டன்
செம்பொன்தேர்தந்தாரே திகழ்வேந்தரென்மாமன்
மாணிக்கத்தேர்தந்தார்கள் வளநாட்டுராசாக்கள்
முத்துதேர்தந்தார்கள் முடிபுனைந்தராசாக்கள்
சித்திரவீதி தெருக்கள்பதினுயிரமும்
மதுரைப்பெருந்தெருவும் மட்டில்லாவீதிகளும்
பவளத்தேரோட்டவென்றுபத்தினியே நான்கேட்டேன்
தாரேனென்றுசொன்னீரே தகப்பனையும்போகவிட்டீர்
பவளத்தேரெங்கேயென்று பாலன்பிணங்கினுன்
அவ்வார்த்தைகேட்டாளே அல்லிப்பெருமாளும்
அருச்சுனன்போனதொரு அந்நாளைப்பார்க்கலுற்ருள்
பதினுறுநாளாச்சு பார்த்திபன்போனதுவும்
மூன்றுநாளாறு பொழுதிலேவாரேனென்று
மைந்தன்மேலாணையிட்டு மாபாவிபோனனே
மைந்தன்மேலாணை மறந்தானேவாள்விஜயன்
ஆணைமறந்தவனும் ஆர்மேலேஆசைகொண்டான்

எங்கேஉல்லாசமா யிருக்கிருனேவாள்விஜயன் (ன்
அவன்-எமலோகம்போனாலும் இட்டுவந்துசங்கரிப்பே
பாதாளம்போனாலும் பார்த்திபனைக்கொன்றிடுவேன்
ஆகாயம்போனாலும் அதம்பண்ணிப்போட்டிடுவேன்
என்று-சீறியேகண்சிவந்து சிங்கத்தின்குட்டியைபோல்
கையைக்கடித்துக் கன்னியருந்தானுமிழ்ந்தாள்
உதிரமுஞ்சதையுமாய் உமிழ்ந்தாளேபூமியிலே
காட்டானைபோலாகக் கதறியெழுந்தாளே
சிங்கத்தைப்போலாகத் தேன்மொழியாளல்லியரும்
உருட்டினளிருகண்ணை ஒதுங்கினர்மன்னர்களும்
ஆக்கரித்துப்பற்கடித்து அதட்டியெழுந்தாளே
ஆராலுங்கூடியே ஆற்றவொண்ணக்கோபமுடன்
பாண்டிவளநாடு பஸ்பமாய்ப்பத்துகுது
பகல்வத்திபோலாக எரியுதேயிருகண்ணும்
மைந்தனைத்தானிடுக்கி வளநாட்டாள்தான்குதித்தாள்
அறுபதுபேரெழுந்து அன்னேரமோடிவந்து
அம்மா-எந்தெந்தநாளென்று அறிவாயிளங்கொடியே
எங்கேயிருந்தாலும் இட்டுவாரோமர்ச்சுனரை
நீ-இங்கேயிருமம்மா இராசகுலநாயகமே
என்றதுகேட்டுமவளேதுசொல்வாளல்லியரும்
எனக்கெதிர்சொல்லாதே யென்னுணையையாவே
அரண்மனைதிறவுகோல் அண்ணருடகைக்கொடுத்தாள்

அல்லியராணி அர்ச்சுனன்மேல் படையெடுத்தல்.

ஆரடாமந்திரியே அறிவுள்ளகாருபாரி
ஆனைசேனைபரிவாரம் அடங்கலும்பயணமென்ருள்
காலாளுஞ்சேவகருங் கடுகப்பயணமென்ருள்
தேர்கொண்டுவாருமென்ருள் சீக்கிரமாய்ப்போகவென் (று
சொன்னபொழுதிலே துரிதமாய்மந்திரிகள்
சித்திரத்தேர்தன்னைச் சீராயலங்கரித்தார்
ஆறுவண்டிநூறுசட்டம் அழகானகுத்துக்கால்
குத்துக்கால்சொப்பனிட்டுக் கொடுங்கைதிரைவளைத்து
கும்பகலசமுங் குடைகளலங்கரித்தார்
அங்குருச்சீலையது அலங்காரம்பண்ணுர்கள்
பாராசாரிபுரவியொன்று பஞ்சகலியாணியொன்று

தேசியென்னும்புரவியொன்று பஞ்சகலியாணியொன்
நாலுபுரவிகளை நலமாயலங்கரித்து (று
குதிரையலங்கரித்து கொண்டுவந்துதேரிற்கட்டி
அலங்கரித்தோம்தேரையென்றடிபணிந்து நின்றார்கள்
பயணமீபயணமென்று பயணபேரிதானடித்தார்
இப்போபயணமென்று இயலாகத்தானடித்தார்
கானலுக்குத்தானெடுத்தார் கறுப்புநல்லகூடாரம்
வெய்யலுக்குத்தானெடுத்தார் வெள்ளைநல்லகூடாரம்
பனிகளுக்குத்தானெடுத்தார் பச்சைநல்லகூடாரம்
யானையின்மேல்டேராவும் குதிரையின்மேல்சண்டாவும்
கறுப்புநிஜான்சிகப்புநிஜான் கலந்துபிடித்தார்கள்
யானைகளாறுகோடி அசுவங்களேழுகோடி
தேர்களொருகோடி தேரணிகள்முக்கோடி
அமரதருஞ்சமரதரும் ஆவ்தாணமரகதரும்
கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியர்மராட்டியரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
போட்டசட்டைவாங்காத பொந்திலியரானவரும்
கும்பாசம்வாங்காத குலமன்னரானவரும்
மட்டில்லாச்சேனைகளும் மன்னர்பயணமானார்
பட்டயமுஞ்சூரிகளும் பாங்கானவாளுகளும்
திமிசாபெரியலகு நேரிசமாம்பெரியகத்தி
கூலிசமுஞ்சூலிசமுங் குண்டுதுப்பாக்கிகளும்
சக்கரமும்வேலுந் தடியும்பெருவுலக்கை (லும்
உண்டைவில்லுஞ் சுண்டுவில்லுஞ் சிங்காணிபூச்சுவில்
எண்ணான்கு ஆயுதமும் எடுத்தரையிற்கட்டினார்கள்
பாளையங்களுள்ளதெல்லாம் பயணங்களாச்சுதப்போ
ஆனையின்மேல்பேரிகை அடிபடுதுகுமுகுமென்று
ஒட்டையின்மேல்பேரிகை ஓசைகிளம்புகுது
அண்டங்கிடுகிடென்ன ஆகாயம்நெக்குவிட
பூமிகிடுகிடென்ன பூலோகம்நெக்குவிட
அடங்காதகோபமுடன் அல்லிமலர்நாயகியாள்
அலங்கரித்ததேர்மேலே ஆணங்குயேறினாள்
மந்திரிபவளசேனை மங்கையவள்தானேறி
தேரைத்திருப்பினாள் சீராகஅக்கணமே
சுற்றிலுங்குடைபிடித்தார் சூரியனைத்தான்மறைக்க
பக்கங்குடைபிடித்தார் பகவானைத்தான்மறைக்க

கவிந்துகுடைபிடித்தார் கதிரோனைத்தான்மறைக்க
அடிபடுதுபேரிகை அந்நகரிதானதிர
எட்டுத்திசைநடுங்க இளங்கொடியாள்தான்வாராள்
ரதகசதுரகமுடன் நாலுவர்க்கசேனைகளும்
மாவணியுந்தேரணியும் மற்றுமுள்ளசேனைகளும்
வருகுதுவெகுசனங்கள் மண்ணும்விண்ணுங் கொள்
செந்தூளெழும்புகுது தினகரனைக்கப்புதங்கே (ளாமல்
கருந்தூளெழும்புகுது கதிரோனைக்கப்புதங்கே
அண்டரண்டந்தானதிர அடித்தார்கள்பேரிகையை
பூமிகிடுகிடென்ன பேரிகைதானூத
கடல்நீர்சுவரிடவே காளசின்னந்தான்முழங்க
அஷ்டதிக்கெங்கும் அதிரசின்னந்தான்முழங்க
அண்டங்கிடுகிடென்ன அடிபடுதேராயபேரி
ஆனையணிநடக்க அரசுமன்னர்பின்னடக்க
குதிரையணிநடக்க கொற்றவர்கள்பின்னடக்க
தெத்துக்கடந்து தெருவீதிதான்கடந்து
அங்காடிவீதியது ஆயர்தெருக்கடந்தார்
குச்சிலியர்வீதி குலமன்னர்தான்கடந்தார்
பீங்கான்கடைத்தெருவும் பின்னிற்கமுன்னடந்தார்
வைகைக்கரைகடந்து மதுராபுரிகடந்தார்
பட்டணத்தைவிட்டுப் பரிவாய்நடந்தார்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுசுனைதாண்டி அரியவனங்கடந்து
சில்லென்றுபூத்த செடிகள்வனங்கடந்து
புல்லென்றுபூத்த புலியின்வனங்கடந்து
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
எட்டடிவேங்கை யிருக்கும்வனங்கடந்து
பத்தடிவேங்கை பருத்தவனங்கடந்து
அறுபதடிவேங்கை அடர்ந்தவனங்கடந்தார்
சிங்கமுலாவும்வனம் சிறுபுலிகள் தூங்கும்வனம்
யாளியுலாவும்வனம் அன்னபட்சிதூங்குவனம்
கெண்டபேரண்டங்கள் இருக்கும்வனங்கடந்தார்
பாதரிப்பூமுல்லை பருத்தவனங்கடந்தார்
ஒருநாரைக்கிருநாரை உயர்ந்தகொம்பில்தானிருக்கும்
கருநாரைக்கிரைதேடும் கதலிவனங்கடந்தார்
குயிலோசைகேட்கும் குளிர்ந்தவனங்கடந்தார்

மயிலோசைகேட்கும் மாந்தோப்புதான்கடந்தார்
ஈக்கள் நுழையாத இருண்டவனங்கடந்து
அண்டரறியாத தண்டவனங்கடந்தார்
வேந்தரறியாத வெளிக்காடுதான்கடந்தார்
சந்திரசூரியர்கள் காணுவனங்கடந்தார்
வெகுதூரம்வருகையிலே வேல்பொருதுங்கண்ணாளும்
பவளம்விளைகின்ற பாங்கானகாடுகண்டாள்
தூரத்திற்கண்டவுடன் தோன்றலவனேதுரைப்பான்
எங்களையாபோனது இக்காடோ ஆச்சியென்றான்
ஐயாவென்றுசொல்லவே அடித்தாளேவாய்மேலே
அடித்தபொழுதிலே அலறிப்புலம்பிவிட்டான்
பாதகனை நினைக்கவல்லோ பாலனைநானடித்தேன்
என்று-மைந்தனைக்கொஞ்சி மடிமேலேவைத்தாளாம்
அப்போ - மதுரைப்பரிசனங்கள் மகாசேனைதான்கலந்
அணியணியாகவேதான் அநேகபடைத்தலைவர் (து
அணித்தலைவர்யுகத்தலைவர் யாவர்களுஞ்சூழ்ந்துவர
ஐந்துலட்சங்குதிரைகளும் அல்லியரைச்சூழ்ந்துவர
ஆனைக்குழாங்களுமே ஆரணங்கைச்சூழ்ந்துவர
சேனைப்பரிசனங்கள் செப்பமுடியாது
இப்படியாக இவர்களுந்தானடக்க
அப்போ-காடுமிருக்கிறதுங் கல்லுமிடறுவதும்
ஆனைமேலம்பாரி அசைந்துகுலுங்குவதும்
குதிரையின்மேல்கூடாரங் கூடஆசைகிறதும்
குதிரைபிரியாமல் கூடநடக்கலுற்றார்
அப்போது அல்லியரும் ஆரணங்குமேதுரைப்பாள்
ஆனைகளாறுகோடி குதிரைகளேழுகோடி
மதுரைப்படைகளெல்லாம் மன்னுவருகுதடா
என்றுமதுரைவளர் இராசாத்திகேட்கலுற்றாள்
அப்போ-அம்மாவருகுதென்றார் ஆனைசேனைபரிவாரம்
பாண்டிவளநாட்டாளும் பவளக்காடுபோய்புகுந்தாள்
வேண்டிவிடாய்த்துவந்து விழுந்ததேசேனையெல்லாம்
காதையடைக்கிறதுங் களையால்வருகிறதும்
நாக்கைவரட்டுறதும் நடுநாக்குவரளுவதும்
வாடிமயங்கினர் மயிலனையாள்சேனையெல்லாம்
அந்தச்சமையத்தில் ஆரணங்குதான்கேட்டு
பாளையமிறங்குமென்றாள் பத்தினியாளல்லியரும்

